Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 1



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 | விசுவாவசு தை ஜனவரி 1966 | இதழ் 1

உள்ளுறை பக்கம்






பத்திராசிரியர்: மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.
ஆண்டுச் சந்தா ரூபா. 3 தனிப்பிரதி அணா 4

# 2—1—66-ல் நடந்த சமாஜப் பொது உறுப்பினர் கூட்டம்

## பணியாளர் தேர்வு, தீர்மானங்கள் முதலியன

சைவ சித்தாந்த மகா சமாஜப் பொது உறுப்பினர் கூட்டம் 2—1—'66 மாலை 2-30 மணிக்குச் சிதம்பரம் இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் அமைந்த வைர விழாப் பந்தலில் நடைபெற்றது.

சமாஜத் தலைவர் திரு கோ. மு. முத்துசாமி பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார்.

கீழ்க்காணும் சமாஜப் பணியாளர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர் :—

1. தலைவர் :- திரு ஜி.எம். முத்துசாமிப் பிள்ளை, ஐ.ஏ.எஸ்., (ஓய்வு)
2. துணைத் தலைவர்கள் :-
   திரு இராவ்சாகிப், நல். முருகேச முதலியார், பி.ஏ.,
   திரு இராவ்பகதூர், கே. அரங்கசாமி முதலியார், பி.ஏ.,
3. செயலாளர் :- திரு டி. கே. நாராயணசாமி நாயுடு
4. உதவிச் செயலாளர் :- திரு மு. நாராயணசாமி முதலியார்
5. பொருளாளர் :- திரு எஸ். இராமசாமி
6. பத்திராசிரியர் :- திரு மு. அருணாசலம் எம். ஏ.,
7. உதவிப் பத்திராசிரியர் :- திரு வித்வான் அம்பை சங்கரனார்
8. மாதக் கணக்குப் பரிசோதகர் :-
   திரு வி. வி. கிருஷ்ணமூர்த்தி
9. ஆண்டுக் கணக்குப் பரிசோதகர் :-
   திரு எஸ். டி. குமார், பி. ஏ.,

செயற் குழுவினர் :- 1. திரு அ. சோமசுந்தரம் செட்டியார் எம். ஏ., 2. திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை— பி. ஏ., எல். டி., 3. திரு ந. ரா. முருகவேள், எம். ஏ., எம்.ஓ.எல்., 4. திரு பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம்.ஏ., 5. திரு எஸ். திருஞானசம்பந்தம் பிள்ளை, எம். ஏ., எல். டி., 6. திரு க. வடிவேலாயுதம், எம்.ஏ., 7. திரு நெ.த. கிருஷ்ணசாமி, எம் ஏ., எல்.டி., 8. திரு எம். சந்திரசேகர முதலியார் 9. திரு கே. எல். பழநிசுவாமி, பி. ஏ., எல். டி., 10. திரு வித்துவான் பி. சொ. சண்முகம் பிள்ளை 11. திரு வித்துவான் வை. குஞ்சிதபாதம் பிள்ளை 12. திரு கொ. நீ. சிங்காரவேலு, எம். ஏ.,

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

| மலர் 39 | விசுவாவசு தை 1966 ஜனவரி | இதழ் 1 |
|---|---|---|

## சமாஜ வைரவிழா

(ஆசிரியர்)

சமாஜ அங்கத்தினர் பெருமைப் படத்தக்க வகையில் இவ்விழா தில்லையம் பதியில் நடைபெற்றது. விவரம் தனியே காணலாம். இதன் சிறப்புகளுக்கு வரவேற்புக் குழுவினர் பொறுப்புடையவர்கள். சிறப்பாக டாக்டர் கே. ரங்கசாமிப் பிள்ளை அவர்களும் தலைமை ஆசிரியர் பு. ர. சாமிநாதன் அவர்களும் வரவேற்புக் குழுவின் உயிர் நாடியாயிருந்து விழாவை நடத்தினார்கள்.

இந்த வைர விழாவின் சிறப்பியல்புகள் பல. சில வற்றை இங்கே குறிப்பிடுதல் நலம். ஒன்று அன்பர்கள் தில்லைப்பதி, திருப்புலீச்சுரம், உமாபதீச்சுரம் ஆகிய இடங்களை வழிபடும் வாய்ப்புப் பெற்றார்கள்.

விழா மலர் வெளியிடுவதாகக் குறிப்பிட்ட ஏழு நூல் களில் திருவாசக மூலம் அச்சிட்டு முடியாமையால் வெளி யாகவில்லை. மற்ற ஆறு நூல்கள் வெளியாயின. வழி பாட்டுத் துறையில் அனேக நூல்கள் சமாஜத் தலைவ ராகிய கோ. மு. முத்துசாமி பிள்ளை அவர்கள் எழுதி வெளியிடுவது மிகவும் பாராட்டு வதற்குரியது.

பல நாளாக ஆங்கிலப் பத்திரிகை ஒன்றை சமாஜம் வெளியிடு வதெனக் கொண்டிருந்த எண்ணம் இந்த விழா வில் கைகூடியிருக்கிறது. சமாஜத் துணைத் தலைவரான திரு நல். முருகேச முதலியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு முதல் இதழ் எண்பது பக்கங்கள் உடைய தாய் வெளியாயிற்று. முதல் இதழ் என்ற அளவில் குறுகிய காலத்தில் மிகவும் அழகுறச் செம்மையாய் இதனை ஆசிரியர் பதிப்பித்திருக்கிறார்.

இம்மகாநாடு சிறப்பான சொற்பொழிவுகளைப் பெற்றிருந்தது. மதுரை ஆலை அதிபர் திரு கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்களின் துணைவியார் திருமதி இராதா தியாகராாசன் அவர்கள் சைவ மங்கையர் மகாநாட்டில் தலைமை வகித்துச் சைவ சித்தாந்தத்தின் சாரமாக அரிய சொற்பொழிவு ஆற்றினார்கள். அவர்களுடைய பேச்சில் சைவ சமைய உண்மைகள் பற்றிய அழுத்தமான தோய்வும் பல சைவ நூல்கள் பற்றிய விரிவான அறிவும் அழகாகவும் நயமாகவும் எடுத்துரைக்கும் ஆற்றலும் வெளியாயின. எதிர்காலத்தில் சைவ சமூகம் எப்படி சமயத்துறையில் முன்னேற முடியும் என்பதற்கு அவர்கள் பேச்சு சிறந்த ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதாயிருந்தது.

இளைஞர் மகாநாட்டில் இலங்கைச் சைவ இளைஞர் பலர். பொருட் கட்டுப்பாட்டுத் தொந்தரவு மிகுந்த இக்காலத்தில் வந்திருந்து நன்முறையில் பேசியதும் மற்றொரு சிறப்பு.

சமாஜத் தலைவர் சமாஜ விழாவில் தக்க ஆசிரியரைக் கொண்டு சிவதீட்சை செய்விக்க வேண்டும் என்று நெடு நாளாக அவாக் கொண்டிருந்தார். அது இம் மணிவிழாவில் நிறைவேறிற்று. 40 பேர் தீட்சை பெற்றனர். 6 பேர் விசேட தீட்சையும் 34 பேர் சமய தீட்சையும் பெற்றனர். கிரியா முறைகள் அனைத்தையும் சிறப்புற வுணர்ந்த சூரியனார் கோவிலாதீனம் மகா சந்நிதானம் ஸ்ரீ சிவாக்கிர யோகிகளாயிருந்த ஸ்ரீலஸ்ரீ மீனாட்சி சுந்தர தேசிக சுவாமிகள் நான்கு தினங்களில் குண்ட மண்டலமிட்டு ஹோமாதிக்கிரியா முறையாக ஞானவதியும் கலந்து, வடமொழி தென்மொழி மரபுகளைக் காட்டி தீட்சை செய்து உபதேசம் செய்தார்கள். இது சமாஜ விழாக்களில் ஏறக்குறைய என்றுமில்லாத ஒரு பெருஞ்சிறப்பு.

தலைவர் பேச்சு வழக்கம்போல் சர்வ ஜனரஞ்சகமாயிருந்தது என்பதோடு, எல்லாச் சொற்பொழிவுகளும் சிறப்புடையன. விசேடமாக திரு. வஜ்ரவேல் முதலியாரவர்கள் நடராஜ தத்துவம் பற்றிப் பேசிய இறுதிப் பேச்சு மிக்க மேலான நிலையில் கருதத்தக்க சைவ சாத்திரப் பிழிவாக இருந்தது.

# கா. இராமநாதன் செட்டியார் மறைவு

(ஆசிரியர்)

சைவப் பேரன்பராகிய கா. ராமநாதன் செட்டியார் அவர்கள் மதுரையில் 4—1—66 காலை 4–30 மணிக்கு இவ்வுலகை நீத்தார்கள் என்ற செய்தியை மிக்க வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்,

செட்டியாரவர்கள் 1944 முதல் 46 வரை சைவ சித்தாந்த மகா சமாஜச் செயலாளராகப் பணி புரிந்தார்; பின்னர் 1963 ல் புதுச்சேரியில் நடந்த மகாநாட்டில் தலைமை வகித்தார்.

நகரத்தார் மரபிலுதித்த இப்பெரியார் B. A., B. L., பட்டம் பெற்று, சென்னை உயர் நீதிமன்றத்தின் வழக்கறிஞராகப் பணிபுரிந்து வந்தார். அக்காலத்தில் அவரிடத்தில் எப்போதும் அமைதியும் தெய்வ உணர்ச்சியும் ஓங்கியிருந்தன. மயிலைத் தமிழ்ச் சங்கம் ஒன்று நிறுவி அதன் வாயிலாக திரு. வையாபுரிப் பிள்ளை யவர்களைக் கொண்டு அரிய தமிழ் நூல்கள் பல வெளியிடச் செய்தார். அங்கு நவரச மகாநாடு என்ற சிறப்பான இலக்கிய மகாநாடு ஒன்று நடத்தினர். டி. கே. சிதம்பரநாத முதலியார் இலக்கியப் பிரசங்கம் செய்த இடங்களிலும், கே. பாலசுப்பிரமணிய ஐயர் கீதைப் பேருரை நிகழ்த்திய இடங்களிலும், அவரைத் தவறாது காணலாம். அக்காலத்திலேயே அவர், பேச்சில் ஆர்வம் குறைந்தவராயும் செயலிலே நாட்ட முடையவராயும் இருந்தார்.

பிற்காலத்தில் அவர் மலாயா சென்று அங்குள்ள மக்களிடையே வருமானத் துறையில் பேரறிஞராகப் பணிபுரிந்தார். மலாயா சர்வகலாசாலை வளர்ச்சி பெறுவதற்கு எல்லா வகையிலும் உதவி செய்தார்.

திருவாசகத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு அதுபற்றிய வாழ்க்கை விளக்கங்களை தர்மசக்கரம் என்ற பத்திரிகையில் எழுதிவந்தார்,

இவ்வாண்டு மீண்டும் மலாயா விலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்திருந்தார். சமாஜ விழாவில் அவர் கலந்து கொள்வதாகவும் இருந்தது. இதற்கு முன் டிசம்பர் 28 ஆம் தேதி சிதம்பரம் இராமசாமிச் செட்டியார் உயர் நிலைப் பள்ளியின் நூற்றாண்டு விழாவில் கலந்து சொற்பொழிவு செய்த நேரம் பாரிசவாயு தாக்கச் செயலற்றுச் சாய்ந்தார். உடனேயே மதுரை மருத்துவ மனைக்கு அழைத்துச் சென்று தக்க மருத்துவம் செய்தும் கூட, அவர் உடல் நலமடையாமல், காலமாகி விட்டார்.

நல்லொழுக்கத்திற்காகவே வாழ்ந்தவர் செட்டியார். நேர் முகமாக இந்தியாவிலும் மலாயாவிலும் அவரால் வாழ்க்கையில் வளம் பெற்றவர் எண்ணிறந்தோர். அவர் நாகரிகமே உருவானவர்; பண்பாட்டின் வடிவம். அமைதியான பேச்சும் எப்போதும் மாறாத இன் சொல்லும், அன்பே வடிவாகவும் சீலமே நோன்பாகவும் உள்ள செட்டியாரவர்களைப்போல் மற்றோரைச் சொல்வது அரிது.

தம் தினசரி வாழ்க்கையில் கூட்டுப் பிரார்த்தனையை முக்கிய அங்கமாய்க் கொண்டிருந்தார். சூழ்ந்துள்ள அனைவரையும் அதிகாலையில் ஒன்று கூட்டி, 5-45 க்கு சமரசப் பிரார்த்தனை செய்வது அவருடைய வழக்கம். சமாஜம் இப்பொழுது வெளியிட்டிருக்கிற பிரார்த்தனைப் பாமாலையும் அவருடைய நூலை ஆதாரமாய்க் கொண்டது.

சமீபத்தில் சித்தாந்தம் பத்திரிகையில் வந்த திருவாசகப் பதிப்புப் பற்றிய கட்டுரையை வாசித்து, நமக்குப் பின்வருமாறு எழுதினார்! ‘புது தெல்லி முதலிய இடங்கள் சென்று இரு தினங்களுக்கு முன்னர் இங்கு வந்தேன். திரு சித்பவானந்தா அவர்களைப் பார்க்க 26—12—65 இங்கிருப்பேன். பின்னர் வரலாமா வென்ற எண்ணம்; உங்கள் வெளியீட்டு வேலைகள் நடந்து வருவது மகிழ்ச்சி. உங்கள் criticism உண்மையாயினும், வேண்டியதாயினும், இனிமையாக இருக்கலாமென்று தோற்றுகிறது. என் criticism அனுவசியமா? அன்பு ஏற்க.— கா. இராமநாதன் 23—12—65.’’

காலஞ் சென்ற பெரியாருடைய ஆன்மா சிவபெருமானுடைய திருவடி நிழலில் பேரானந்தப் பெருவாழ்வு பெறுக என்று எல்லாச் சைவ அன்பர்களோடு நாமும் வேண்டித் துதிக்கிறோம்.

# ஈடு செய்ய முடியாத இழப்பு

கொ. நீ. சிங்காரவேலு.

சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தாண்டு சோகத்தில் தொடங்குகின்றது. சமாஜத்தின் பெருந் தலைவர்களில் ஒருவரான மலேயா திரு K. இராமநாதன் செட்டியார், பி.ஏ., பி.எல்., அவர்கள், 4—1—66 காலை 4-30 மணிக்கு மதுரையில் சிவனடி சேர்ந்தார். இந்தத் தேதிக்குச் சரியாக ஒரு மாதத்திற்கு முன்னர்தான் தாய்நாட்டில் உயிர் நீப்பதற்கென்றே போலும் மலேயாவிலிருந்து தில்லி வந்து சேர்ந்தார். சென்ற மாதம் தில்லியில் நடந்த அகில உலக இந்து சமய மாநாட்டிற்கு மலேயா நாட்டுப் பிரதிநிதியாக சில நண்பர்களுடன் வந்து அம்மாநாட்டில் கலந்து கொண்டார். அங்கிருந்து, ரிஷிகேசம், காசி முதலிய இடங்களைத் தெரிசித்து பெங்களூரில் வாரக் கூட்டு வழிபாட்டுத் தொடக்க விழாவில் கலந்து கொண்டு பேசினார். இவர் இந்தியா வருவது தெரிந்து, முன்னரே நம் சமாஜ வைர விழாவில், வைர விழா மலர் வெளியிட அவரை அழைத்திருந்தோம். அதற்கிணங்கி இவர் பெங்களூரிலிருந்து சென்னை வந்து சேர்ந்தார். சென்னையில், புரசை சர் எம். ஸி. டி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் திரு கிருதாரிப் பிரசாத் சொற்பொழிவு வரிசையைத் தொடக்கிவைத்தார். அந்தர்யோகம் நடத்துவதற்குச் சென்னை வந்திருந்த தவத் திரு சித்பவானந்த சுவாமியுடன் ஒருநாள் முழுவதும் தங்கியிருந்தார். பின்னர் சமாஜ வைர விழாவில் கலந்துகொள்ள மூன்று நாள் முன்னதாகவே சிதம்பரம் சென்று 23—12—65-ல் நடந்த இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியின் பொன் விழாவில் கலந்துகொண்டு, திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் தலைமையில் பேசிக் கொண்டிருக்கும் போது பெரிய கூட்டத்தின் முன்னிலையிலேயே சுகவீனமடைந்தார். காரணம், 'காரனரி த்ரோம்போஸிஸ்' என்ற நோய் என்று சொல்லப்பட்டது. மதுரையில் உயிர் நீத்தார்

இவர் சிறந்த மனிதர். சமயப் பணியையே வாழ்க்கையின் பண்பும் பயனுமாகக் கருதியவர். தன் முனைப்பின்றிச் சேவை புரிபவர். இவர் இருந்த இடமெல்லாம் சிவம் மணக்கும். சொல்லியபடி செய்பவர். தாம் செய்வதையே சொல்பவர். பேச்சு ஆணித்தரமாகயிருக்கும். வீண் சொல் ஆரவாரம் இருக்காது. அவர் பேச்சில் புதிய கருத்துக்கள் இருக்கும்; அல்லது பழைய கருத்துக்கள் புதிய ஆடையில் தோன்றும். நடைமுறைக்கு ஒத்ததாகயிருக்கும். அவர் பேச்சில் ஏட்டுச் சுரைக்காய்க்கே இடமில்லை.

இவர் மலாய் நாட்டுத் தமிழ் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்தவர். அங்குச் சில காலம் வழக்கறிஞராகவும் அரசியல் தலைவராகவும், கோலாலம்பூர் சட்டசபை உறுப்பினராகவும் பணி புரிந்தவர். பின் அரசியல் வாழ்க்கையை விட்டுச் சமயப் பணியே பணியாக் கொண்டார். காலைக் கூட்டு வழிபாடு என்ற முறையை மலேயாவில் பரப்பினர். சில மாதங்களுக்கொருமுறை மலேயாவில் பற்பல இடங்களில் அந்தர் யோகம் நடத்திச் சமய உணர்ச்சியை மக்களுக்கு ஊட்டினர். அவர் நடத்தும் அந்தர் யோகமே தனிச் சிறப்புடைத்து. இரண்டு மூன்று நாள் இராப் பகல் நாம் எப்போதும் இறைவனையே சிந்திக்கச் செய்வார். இவ்வந்தர் யோகத்தில் கலந்த ஒவ்வொருவரும் முக்கியப் பங்கு கொண்டதாக மன நிறைவு கொள்வர். இதில் அவர், தம் தலைமை தோன்ருது தலைமை தாங்குவார்.

இவர் இந்தியாவில் இருந்தபோதும் மலேயாவில் இருந்தபோதும் சமாஜத்தின் வளர்ச்சியில் அக்கறை கொண்டிருந்தார். **1944–46**-ல் சமாஜச் செயலாளராகப் பணியாற்றினர். 1944-ல் பள்ளத்தூரில் சமாஜ ஆண்டு விழா மிகச் சிறப்பாக நடத்தித் தந்தார். 1963-ல் மலேயாவில் சமாஜச் சிறப்பு மாநாடு கூட்டினர். அதே

ஆண்டு புதுவையில் கூடிய சமாஜ ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கினார்.

இவர் வெளிநாடுகளில் பலயிடங்களுக்குச் சென்று சைவத்தின் பெருமையை விளக்கியுள்ளார். இலங்கைக்குப் பலமுறை சென்றுள்ளார். 1964-ல் பிலிப்பைன்ஸ் நாட்டில் நடந்த ஆசிய கிருத்தவ இளைஞர் மாநாட்டில் இந்து சமயப் பிரதிநிதியாகக் கலந்துகொண்டு ஆங்கிலச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். கம்போடியா, தாய்லாந்து முதலிய நாடுகளுக்கும் சென்று சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். தாய்லாந்தில் சில சீனர்களைக் கூட்டி ஆங்கிலத்தில் அந்தர் யோகம் நடத்தியதாகச் சொன்னார். சமாஜப் பிரதிநிதிகள், பர்மா, தெற்கு ஆப்ரிகா முதலிய நாடுகளுக்கும் சென்று சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பரப்பவேண்டும் என்று சொல்லுவார். அவர் உள்ளுவதெல்லாம் உயர்ந்தவை. உள்ளுவதை யடைய வழியையும் வகுத்துக் கொடுப்பார்.

இவர், 'ஏன் பிறந்தோம்' 'சைவத்தின் சிறப்பு' 'வாழ்க்கையும் சமயமும்' 'ஆழமும் அகலமும்' 'ஞானச் செய்தி' 'பார்ப்பது எது?' 'மலேயா இந்தியா யாத்திரை' 'வேலன் விளையாட்டு' முதலிய பல நூல்கள் இயற்றியுள்ளார். இவருடைய இஷ்ட மூர்த்தி முருகன் என்று ஊகிக்க இடமுண்டு.

இவர் மறைவு சமாசத்திற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம். மலேயா நாட்டுத் தமிழ் மக்களின் நஷ்டத்தை என் சொல்வது? அவர் குடும்பத்தாருக்கு சமாஜத்தின் அநுதாபம் உரித்தாகுக. அவர் ஆன்மா சாந்தம் அடைய இறைவன் அருள் பாலிப்பாராக!

—★—

# சிதம்பரத்தில் சமாஜ வைர விழா

[G. கலியாணம் M.A.]

" ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே "

புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் தமிழ் நாட்டைக் குறிக்கப்போந்த சேக்கிழார் பெருமான்' "மாதவம் செய்த தென்திசை" என்று போற்றிப் புகழ்ந்தனர். அத்தகு சீர்த்தமிழ்த் திருநாட்டின் ஒரு பகுதியாகிய தென் ஆர்க்காடு மாவட்டம் " அறந்தருநாவுக்கரசும் ஆலால சுந்தரரும் பிறந்தருளும்" பேறுபெற்றது. சைவசித்தாந்தத்தலைமணி நூலாம் சிவஞானபோதத்தை உலகுக்கருளிய 'பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய் கண்டநாதனை' ஈன்றெடுக்கும் தவம்செய்தது. அம்மட்டோ! தில்லைவாழந்தணர், திருநீலகண்டர், மெய்ப் பொருளார். திருநீலகண்டயாழ்ப்பாணர், திலகவதியார், கணம்புல்லர், கலிக்கம்பர், சடையனார், இசைஞானியார், நரசிங்கமுனையரையர், நம்பியாண்டார்நம்பி, அருணந்தி சிவாசாரியார், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியார், இராமலிங்கர் போன்ற பல மெய்யடியார்களைத் தோற்றுவித்த பெருமையுடையது. ஈன்றாளுமாய் எந்தையுமாய் உடன்தோன்றினராய்த் தன் அடியோங்களுக்குத் தோன்றாத்துணையாய் நின்றாளும் திருப்பாதிரிப்புலியூர்ப் பெருமான் திருமுன்னருள்ள ஸ்ரீலஸ்ரீஞானியார்சுவாமிகள் மடாலயத்தில் 1905-ஆம் ஆண்டு சைவசித்தாந்த மகா சமாஜம் தோன்றியது. கோயில் என்ற பொதுப் பெயரையே சிறப்புப் பெயராகக் கொண்ட சிதம்பரத்தில் சமாஜத்தின் முதல் இரண்டு ஆண்டுவிழாக்கள் நடந்தன. 1955-ல் பொன்விழாவும் அப்பதியின்கண்ணே நிகழ்ந்தது. மீண்டும் சமாஜத்தின் 60-ஆம் ஆண்டு நிறைவு விழா ஆகிய வைரவிழா 31-12-65, 1-1-66 2-1-66 இந்த மூன்று நாட்களிலும் அத் திருத்தலத்திலேயே நடைபெற்றது.

## முதல் நாள்

தமிழ்நாட்டின் பல மாவட்டங்களிலிருந்தும் இலங்கை, மலேயா முதலிய நாடுகளிலிருந்தும் விழாவிற்கு வந்திருந்த சைவ மெய்யன்பர்கள் அதிகாலையில்

தில்லையில் எல்லையில் தனிக்கூத்தியற்றும் எம்பெருமானை வழிபட்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்தனர். ஆண்டு விழா வெளியீட்டு நூல்களும் அம்பலவாணரின் பொற் பாதங்களில் வைத்துப் புனிதமாக்கப் பெற்றன. எல் லோரும் திருவெம்பாவைப் பாடலை ஓதினர். கோயிலி லிருந்து மாநாட்டுப் பந்தலுக்குத் தலைவர்கள் முதலிய வர்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பெற்றனர். அன்பர்கள் திருமுறைப்பாராயணம் செய்ய, மேளவாத் தியம் முழங்க, விருதுகள்முன்செல்ல ஊர்வலம் சென்றது. வழி நெடுகிலும் தோரணங்களும், விழாத் தலைவர்களை வருக என்றழைக்கும் வளைவுகளும் காட்சியளித்தன. ஊர்வலம் மாநாட்டுப்பந்தர் அமைந்திருக்கும்இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியை அடைந்ததும் அர நாம முழக்கம் எழுந்தது. தென்ஆர்க்காடு மாவட்டக் கலெக்டர் திரு. டி. வி. வாசுதேவன் ஐ. ஏ. எஸ். அவர்கள் மாநாட்டுப்பந்தர் முன் இடபக் கொடியை ஏற்றி வைத் தார்கள். மாநாட்டுப்பந்தர் மிக அழகாக அலங்கரிக்கப் பெற்றிருந்தது. மேடைமீது ஒருபுறம் சிவகாமசுந்தரி உடன்கூடிய கூத்தப்பெருமானின் திருவுருவம் பச்சை வண்ணப் பின்னணியோடு மின் விளக்குகளுடன் காட்சி யளித்தது. மற்றொரு பக்கம் சிவலிங்கப் பெருமானும் நந்தியும் வாடாத மலர் மாலையுடன் அணிபெறத் திகழ்ந் தனர். தலைவர்கள், வரவேற்புக்குழுவினர் முதலியோர் மேடைமீதமர்ந்தனர். இறை வணக்கத்துடன் காலை 9 மணிக்கு மாநாடு தொடங்கியது.

அருள்மொழி அரசு - திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். வரவேற்புக் குழுத் தலைவர் திரு. ஆர். கனகசபை எம். பி. அவர்கள் முதலில் வரவேற்புரையை நிகழ்த்தினார்கள். (அதை வேறிடத் தில் காண்க). பின்னர் தென்ஆர்க்காடு மாவட்டக் கலெக்டர் திரு. டி. வி. வாசுதேவன் ஐ ஏ. எஸ் அவர்கள் தமது கொடியேற்றுரையை ஆற்றினார்கள். சமாஜச் செயலாளர் திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார் எம். ஏ. அவர்கள் ஆண்டறிக்கையை வாசித்தார்கள். (அதைப் பிறிதோர் இடத்தில் காண்க.) குடியரசுத் தலைவர், தமிழக ஆளுநர், முதலமைச்சர், அமைச்சர் திரு.

மன்றுடியார், தருமை ஆதீனத்தலைவர், மதுரை ஆதீனத் தலைவர் முதலியவர்களிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்தி கள் வாசிக்கப்பெற்றன. தமிழ்நாடு சட்டசபைத் தலைவர் திரு. எஸ். செல்லப்பாண்டியன் பி. ஏ., பி. எல்., அவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்துப் பேருரையாற்றினார்கள். வித்துவான் திரு. அம்பை சங்கரனார் அவர்கள் மாநாட்டுத் தலைவர்களுக்கு வரவேற்பிதழை வாசித்தளித்தார்கள். டாக்டர் திரு கே. அரங்கசாமிப் பிள்ளை எம்.பி. பி.எஸ்., அவர்கள் வைர விழா மலரை வெளியிட்டு அதில் அடங்கி யுள்ள கட்டுரைகளின் சிறப்புக்களை எடுத்தியம்பினார்கள். பின்னர், திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் இயற்றிய "சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே மொழி பெயர்ப்பல்ல" என்ற நூலையும், திரு. கௌரிமுத்துக் குமாரசாமி நாயனார் அவர்கள் பொருளுதவியுடன் திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை ஐ. ஏ. எஸ். (ஓய்வு) அவர்கள் எழுதிய "முருக வழிபாடு" என்ற நூலையும், திரு. கோ. நீ. சிங்காரவேலு எம். ஏ., அவர்கள் பதிப்பித்த 'கூட்டு வழி பாட்டுப் பாமாலை" என்னும் நூலையும் சைவப்பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை பி. ஏ. எல். டி. அவர்கள் சமாஜ வெளியீடுகளாக வெளியிட்டார்கள். மேலும், திரு. மு. அருணசலம் எம். ஏ. அவர்கள் பழைய உரை யுடன் பதிப்பித்த 'தத்துவப்பிரகாசம்" என்னும் நூலையும் அவர்களே எழுதிய "திருவாசகக் குறிப்புகள்" என்ற கட்டுரைத்தொகுதியையும், வித்துவான் திரு. க. வெள்ளை வாரணர் அவர்கள் நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் பதிப்பித்த "திரு அருட்பயன்" என்னும் நூலையும் திரு. மு. அருணசலம் அவர்கள் அவைகளின் சிறப்புக்களைக் கூறி சமாஜவெளியீடுகளாக வெளியிட்டார்கள். சென்னை இந்து சமய அறக்கட்டளை ஆட்சித்துறை ஆணையாளர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார் பி. ஏ., பி எல். அவர்கள் சமாஜ முத்திங்கள் ஆங்கில வெளியீடான "சைவசித்தாந்தம்" என்னும் இதழை வெளியிட்டு அதனுல் ஏற்படும் நன்மைகளைப் பற்றி விரிவாகப் பேசி ஞர்கள். அருள்மொழி அரசு—திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் தமது தலைமைப் பேருரையை நிகழ்த் திஞர்கள். (இவ்விதழில் வேறிடத்தில் காண்க.) அவர்கள், "அப்பன் நீ அம்மை நீ" என்று தொடங்கும் அப்பர் சுவாமிகளின் பாடலை எடுத்துக்கொண்டு அதற்குப்

புத்துரையொன்று பொருந்தக் கூறினார்கள். "இப் பொன் நீ" என்பது 1955-ல் சிதம்பரத்தில் சமாஜப் பொன் விழா நிகழ்ந்ததையும், "இம்மணி நீ" என்பது நடந்துகொண்டிருக்கும் மணி(வைர)விழாவையும் குறிக்கும் என்று கூறி, "இம்முத்து நீ" என்பதால் சமாஜ முத்து விழாவும் சிதம்பரத்திலே திருவருளால் நடைபெறும் என் பதைக் குறிக்கும் என்று சொல்லி அப் பேரவையினரை மகிழ்வித்தார்கள். சிவன் சீவன் என்ற இரு பொருள்கள் பற்றிய சித்தாந்தக் கருத்துக்களை அவருக்கேயுரிய நகைச் சுவையுடன் மருந்தைச் சர்க்கரையுடன் குழைத்துக் கொடுப்பதுபோன்று எளியமுறையில் தெளிவுபெற எடுத் துச்சொன்னார்கள். முற்பகல் நிகழ்ச்சி 1 மணிக்கு முடி வுற்றது.

அன்று பிற்பகல் 4 மணிக்கு மீண்டும் மாநாடு கூடியது. இறைவணக்கம், தலைவர் முன்னுரையின் பின், குடந்தை திரு. பி. சுந்தரேசம்பிள்ளை அவர்கள் "தேவாரப் பண்" பற்றியும், திருவதிகை திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் "உறுதி" என்ற பொருள்பற்றியும், காஞ்சிபுரம் வித்வான் திரு. ஜயசெந்தில்நாத முதலியார் அவர்கள் "நிறைபெருங் கருணை" என்பது பற்றியும் சொற்பொழிவுகள் ஆற்றினார்கள். தலைவர் அவர்கள் "அன்பும் அறிவும்" என்ற பொருள்பற்றி இரத்தினச் சுருக்கமாகப் பேசி அவையோரை ஆனந்தக் கடலுள் ஆழ்த்தினார்கள். கடவுள் வாழ்த்துடன் இரவு 8 மணிக்கு முதல் நாள் நிகழ்ச்சிகள் இனிது முடிந்தன.

## இரண்டாம் நாள்

1-1-1966 சனிக்கிழமை காலையில் மாநாட்டிற்கு வந்திருந்தோர் இளமையாக்கினார் கோயிலில் வழிபாடு செய்தனர். 9 மணிக்கு, சைவ மங்கையர் மாநாடு தொடங் கியது. சென்னை டாக்டர் திரு இரத்தினவேலுசுப்பிரமணியம் (B. Sc., M. D., M. R. C. P. London) அவர்கள் தொடக்க வுரை நிகழ்த்தினார்கள். ஆலை அதிபர் திரு. கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்களின் துணைவியார் திருமதி. இராதாதியாகராசன் B.Sc. அவர்கள் தலைமைதாங்கினார்கள். அவர்கள் தலைமையுரையில் சைவம் என்னும் பொருள் பற்றிப் பேசும்போது திருமூலர் அருளிய "சைவம் சிவத் துடன் சம்பந்தமாவது" என்று தொடங்கும் ஒரு பாடலை

எடுத்துக்கொண்டு அதில் கண்ட நான்கு வகைகளையும் முறைப்படுத்தி சாத்திர தோத்திர மேற்கோள்களுடன் மிகத்தெளிவாக விளக்கிப் பேசினார்கள். இதுவரையில் நடந்த மங்கையர் மாநாடுகளில் இத்தகைய தலைமையுரையைத்தாங்கள் கேட்டதில்லை என்று அவையிலிருந்த பெரியோர் பாராட்டிப் பேசினர். இந்தத் தலைமையுரையின் தன்மையை அடுத்தமாத இதழில் அனுபந்தமாக வெளிவருவதினின்றும் உணர்ந்து கொள்ளலாம். பின்னர்' சென்னை திருமதி. ஜெயகுமாரி பாஸ்கரன் அவர்கள் "பெரிய புராணப் பெண்மணிகள்" என்னும் பொருள் பற்றியும், இலங்கை சைவப்புலவர்-பண்டிதை திருமதி. தங்கம்மா அப்பாகுட்டி அவர்கள் "மணிவாசகரின் ஞான உள்ளம்" என்ற தலைப்பிலும், நாவலர்–பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களின் திருமகளார் வித்துவான் திருமதி. சிவபார்வதி அம்மையார் அவர்கள் "திருஞானசம்பந்தர்" என்பதுபற்றியும் விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். மாநாட்டுத்தலைவியார் அவர்கள் அவ்வப்போது சீரிய கருத்துக்களைக்கூறி தமது முடிப்புரையில் சைவ மங்கையர் மாநாட்டிற்கென ஒரு முழு நாளைக் கொடுக்க வேண்டுமென்றும் கூறினார்கள். பிற்பகல் 2 மணிக்குச் சைவ மங்கையர் மாநாடு கடவுள் வாழ்த்துடன் இனிது நிறைவேறியது.

பிற்பகல் 3 மணிக்குச் சமாஜ உறுப்பினர்கள் கூட்டத்தில் ஒவ்வொருவரும் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். 4 மணிக்குச் சைவர் மாநாடு திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தலைமையில் தொடங்கியது. இறைவணக்கத்தின் பின் தலைவர் அவர்கள் தங்களுடைய முன்னுரையைக் கூறினார்கள். தூத்துக்குடி திருமுறைச் செல்வர், சித்தாந்த தினகரன் வித்துவான் திரு மறை திருநாவுக்கரசு அவர்கள் "பேரின்பம் பெற்ற பெருந்தகையார்" என்பது பற்றியும், பேராசிரியர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், எம்.ஏ., பி.எல்., எம். ஓ. எல்., அவர்கள் (மதுரைப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தராக நியமிக்கப் பெற்றிருக்கும் பேரறிஞர்), '12–ஆம் சூத்திரத்திற்குத் தற்காலத்திற்குரிய விளக்கம்" என்னும் பொருள்பற்றியும், திரு. ந. ரா. முருகவேள் எம். ஏ., எம். ஓ. எல், அவர்கள் "உமாபதி

சிவம்'' என்பதுபற்றியும் சொற்பொழிவுகள் செய்தார்கள். திரு. வாரியார் அவர்கள் சமாஜம் நடாத்தும் சைவப் புலவர், இளஞ்சைவப்புலவர் தேர்வுகளில் வெற்றிபெற்ற வர்களுக்குப் பட்டங்களும் பரிசுகளும் வழங்கித் தமது முடிப்புரையுடன் விடைபெற்றுச் சென்றூர்கள். இரவு 8 மணிக்கு இரண்டாம்நாள் நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

### மூன்ரும் நாள்

2–I–66 ஞாயிற்றுக்கிழமை காலையில் மாநாட்டிற்கு வந்திருந்தோர் திருமுறைப் பாராயணம் செய்துகொண்டு நடந்து கொற்றவன் குடியிலுள்ள உமாபதிசிவாசாரியார் கோயிலுக்குச் சென்றனர். அவ்வூர் மக்களும், கோயில் நிர்வாகிகளும் எதிர்வந்து வரவேற்றனர். இரு கூட்டங் களும் கைகூப்பி வணங்கியது சேக்கிழார் பெருமான் அடி யார்கூட்டங்கள் சந்திக்கும் போது சொல்லியுள்ள காட்சி களை நினைவுக்குக் கொண்டுவந்தது. உமாபதிசிவனுர் கோயில், பெற்ருன் சாம்பான் சமாதிநிலை முதலியவற்றில் வழிபாடு நிகழ்ந்தது. திரு. நல். முருகேசமுதலியார் அவர் களும், திரு. ஜே. எம். சோதசுந்தரம் பிள்ளை அவர்களும் உமாபதி சிவத்தின் வரலாற்றையும், அவர் அருளிய நூல் களைப்பற்றியும் பேசினுர்கள். சர்க்கரை அன்னம், சுண் டல், பழம் முதலியவற்றை வந்திருந்தோர் அனைவருக்கும் படைத்து உபசரித்தனர். அக்கோயில் நிர்வாகிகளுக்கு மாநாட்டினரின் நன்றி உரியதாகும்.

மாநாட்டுப்பந்தரில் காலை 9 மணிக்கு சென்னைமாநிலக் கல்லூரி வடமொழிப் பேராசிரியர் திரு பெ. திருஞான சம்பந்தம் பிள்ளை எம். ஏ., எல். டி., அவர்களின் தலைமையில் சைவ இளைஞர் மாநாடும், சைவப் புலவர் மாநாடும் தொடங்கியது. இறைவணக்கத்தின் பின்னர் தலைவர் அவர்கள் தமது தலைமையுரையை நிகழ்த்தினுர்கள். (அதை அடுத்தமாத இதழில் காண்க.) பின்னர் கீழ்க் காணும் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன :–

தாம்பரம் திரு க. வடிவேலாயுதம் எம். ஏ. அவர்கள்
—'' திருமுறைப் பெருமை''

இலங்கை சைவப்புலவர். வித்துவான் திரு. வ. வ செல்லையா அவர்கள்.
—''கந்தபுராணக் கலாச்சாரம்''

சிதம்பரம் சித்தாந்தப் புலவர் வித்துவான் திரு. கு. திருநாவுக்கரசு அவர்கள். —" சிறிய பெருந்தகையார் "

இலங்கைப்புரவலர் திரு. இ. வயித்தியலிங்கம் B. Sc. (Eng) அவர்கள்.—" அவனன்றி ஓரணுவும் அசையாது"

இலங்கை சைவப்புலவர் பண்டித திரு. த. கிருஷ்ண பிள்ளையவர்கள். —" சேக்கிழார் தந்த செல்வம் "

இலங்கை சைவப்புலவர் திரு. மு திருஞானசம்பந்தம் பிள்ளையவர்கள். —" வெளிநாடுகளில் சைவம்"

தலைவர் அவர்களின் கருத்துரையின் பின் கடவுள் வாழ்த்துடன் கூட்டம் 1 மணிக்கு முடிவுற்றது.

மீண்டும் பிற்பகல் 2 மணிக்கு சமாஜ உறுப்பினர் பொதுக்கூட்டம் நடந்தது சமாஜ அலுவலர் தேர்தல், தீர்மானங்கள் நிறைவேற்றல் முதலியன நிகழ்ந்தன. மாலை 4 மணிக்குச் சைவர் மாநாடு திரு. கோ. மு. முத்து சாமி பிள்ளை ஐ. ஏ. எஸ். (ஓய்வு) அவர்கள் தலைமையில் கூடியது. சென்னை திரு. திருப்புகழ் மணி அவர்கள் " குஞ்சிப்பூ " என்பதுபற்றியும், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் வித்துவான் திரு. மு. அருணசலம் பிள்ளையவர்கள் " ஏகனாகி இறைபணி நிற்றல் " என்னும் பொருள்பற்றியும், காஞ்சிபுரம் சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேலு முதலியார் பி. ஏ. எல். டி. அவர்கள் " மூவரும் முதல்வன் கூத்தும் " என்ற பொருள்பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். தலைவர் அவர்கள் முடிப்புரை கூறினார்கள். சமாஜச்சார்பில் திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார் எம்.ஏ. அவர்களும், வரவேற்புக் குழு சார்பில் திரு. பு. ர. சுவாமிநாதன் எம். ஏ. எல். டி, அவர்களும் எல்லோருக்கும் நன்றுகூறினார்கள். இரவு 8 மணிக்கு மூன்றும் நாள் நிகழ்ச்சிகள் இனிது நிறை வேறின.

1955-ல் நடந்த பொன்விழாவை இரண்டு இரத்தினங்கள் நடத்தித் தந்தன—ஆடூர் எம். இரத்தினசபாபதிப் பிள்ளை யவர்கள், சிதம்பரம் திரு. எஸ். இரத்தினசாமிசெட்டியார் அவர்கள். இப்போது நடந்த மணிவிழாவின் வரவேற்புக் குழுத் தலைவர், முன்னவரின் திருமகனாரான திரு ஆர். கனகசபை, எம். பி. அவர்களே. திரு எஸ். இரத்தினசாமி செட்டியார் அவர்கள் தங்களுடைய பெரிய கட்டிடத்தில் உணவளிப்பதற்கு வேண்டிய வசதி செய் தளித்தார்கள். இவர்களுக்குப் பெருந்துணையா யிருந்து

அருந்தொண்டாற்றியவர்கள் டாக்டர் திரு. கே. அரங்க சாமிப் பிள்ளையவர்களும், திரு என். எம். பொன்னம் பலம்பிள்ளை அவர்களும் ஆவர். மற்றும் வரவேற்புக் குழுவின் மற்றைய அங்கத்தினர்களும் சிறந்த பணிபுரிந் தார்கள். தலைமை ஆசிரியர் திரு. பு. ர. சுவாமிநாதன் அவர்களும், அவர்களின்கீழ் ஆசிரியர்களாயுள்ளவர்களும், பணியாளர்களும், மாணவர்களும் நல்ல சேவைசெய்தார் கள். அவற்றை மறக்கமுடியாது. மாநாட்டிற்கு வந் திருந்தோர் அனைவருக்கும் மாணவர் விடுதியில் இடம் அமைத்துக் கொடுத்திருந்தார்கள். மூன்று நாட்களிலும் அறுசுவை உண்டியும், இன்பண்டங்களோடு கூடிய சிற் றுண்டியும், குளிப்பதற்கு வெந்நீர் முதலியனவும் நல்ல முறையில் ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது பெருமகிழ்ச் சிக்குரியதாகும். சமாஜத்தாரும், வரவேற்புக்குழுவினரும் மாநாட்டிற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய் தமைத்ததற்காக மாநாட்டிற்கு வந்திருந்தோரின் நன்றி உரியதாகும்.

இந்த ஆண்டு மாநாட்டில் இரண்டு சிறந்த நிகழ்ச்சி கள் இடம் பெற்றிருந்தன. ஒன்று, சூரியனார் கோயில் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மீனாட்சிசுந்தர தேசிகர் அவர்கள் நாற் பது பேர்களுக்குச் சமய தீட்சையும், சிவபூசையும் செய்துவைத்தார்கள். மற்றொன்று, இராமசாமி செட்டி யார் உயர்நிலைப் பள்ளி மாணவர்களும் ஆசிரியர்களும் ஏற்பாடு செய்த பொருட்காட்சியாகும். தென்ஆர்க்காடு மெய்யடியார்கள் பற்றிய பகுதி மிகச்சிறப்பாய் அமைந் திருந்தது. திருப்பாதிரிப்புலியூர்க் கோயில்முன் அப்பர் சுவாமிகள் நின்ற காட்சியும், இளமையாக்கினார்குளத்தில் திருநீலகண்டரும் அவர் மனைவியாரும் இளமை பெற்ற நிகழ்ச்சியும் உயிரோவியங்களாகத் திகழ்ந்தன. வடலூர் சபை கண்கவர் வனப்பினதாகக் காட்சி நல்கியது. பொது வாக, இந்த ஆண்டு தில்லையில் நடைபெற்ற வைரவிழா எல்லா வகையிலும் சிறந்து நடந்தது என்பது எல்லோ ருடைய ஒருமனதான கருத்து. இவற்றை நடத்திவைத்த அனைவருக்கும் வந்திருந்தோர் அனைவரும் நன்றிசெலுத்தும் கடப்பாடுடையவர். எல்லாவற்றிற்கும் மேலாக மாநாடு நல்லமுறையில் நடந்தேற தில்லைக்கூத்தன் திருவருள் பாலித்ததற்கு அவன் திருவடிகளை வாழ்த்தி வந்தித்து வழிபடுவோமாக.

**"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்"**

# வாழ்க கோவைகிழார்

(அம்பை சங்கரனார்)

நம் சமாஜப் பழம்பெருந் தலைவர்கள் பலருள் ஒருவர் கோவை கிழார், மருதன், இராமச்சந்திரன், செந்தமிழ்ப் புரவலர், சித்தாந்தப் புரவலர், சைவ ஞாயிறு, முன்னாள் அறநிலையத்துறை ஆணையர், பேரூர் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர், "சித்தாந்தம்" "கொங்கு மலர்" முன்னாள் ஆசிரியர், ஆராய்ச்சியறிஞர், சிறந்த நூலாசிரியர் எனும் பல்வேறு சிறப்புகளைப் பெற்றுள்ள இராவ்பகதூர் C. M இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் B.A., B.L., F. R. S. S ஆவர். அவர்களுக்கு 22-12-65 அன்று 77-ஆண்டுகள் நிரம்பி 78-ஆவது ஆண்டு தொடங்குகிறது எனத் தெரிந்து மிக மகிழ்வெய்துகின்றோம். அவர்கள் ஆட்சி பீடத்திலிருந்த ஞான்று நம் சமாஜத்திற்குச் செய்த தொண்டுகள் அளப்பில.

சிலர் அதிகாரத்திலிருக்கும் பொழுது சமய முன்னேற்றப் பணி பற்றிக் கருதாராய்த் தங்கள் அலுவல்களுக் கிடையூறு நேருமோ வென ஐயுறுகின்றனர். சமயப் பணி தங்களின் உரிமைப் பணி என்பதில் யாதும் ஐயமின்று. ஆகவே எந்நிலையிலிருக்கினும் அவரவர் சமயப் பணிகளைச் செய்வதில் சற்றும் மனத்தயக்கம் வேண்டுவதின்று. அவ்வாறு தயங்காது சமயப்பணி ஆற்றியவர்களுள் தலையாயவர் நம் செட்டியார் அவர்கள் என்றால் அது சிறிதும் முகமனாகாது. எனக்கும் சமாஜத்துக்கும் தொடர்பு திருமயிலத்தில் 1940 ஆம் ஆண்டு நடந்த சமாஜ ஆண்டுவிழா முதலேயாகும். அவ்வாண்டுவிழாவில் அவர்கள் அதிகார பீடத்திலிருந்ததால் எல்லா சைவாதீனங்களின் பிரதிநிதிகளையும் வரவழைத்திருந்தார்கள். பல பெருந் திருக்கோயில்களின் அலுவலர்களையும் வருமாறு ஆணையிட்டு அழைத்தார்கள். அம் மாநாட்டுக் காட்சியே என் உள்ளக் கிழியில் என்றும் நின்று இன்பம் தந்து கொண்டிருக்கின்றது. இதனைப் போன்று அவர்கள் செய்த அரும்பெருஞ் சமயப் பணிகள் அளவிட்டுரைக்க வொண்ணா. திருக்கோயில்கள் தோறும் சமயப் பாடல்களை எழுதச் செய்தது, திருக்கோயில்களின் வரலாறுகளை எழுதி வெளியிடச் செய்தது, அவ்வக் கோயில்கள் பற்றிய நூல்களை வெளியிடுமாறு ஊக்கியது முதலிய பல அருஞ் செயல்களைச் செய்த தீரர் அவரே.

அவர்கள் வாழ்வு நம் சமய மேம்பாட்டுக்குரிய நல் வாழ்வாகும். ஆகவே அத்தகைய பெரியார் இன்னும் இந்நிலவுலகில் பல்லாண்டு வாழ்ந்து நம்போலியர்க்குத் தங்கள் பொன்னும் அறிவு அனுபவ, ஆசியுரைகளைத் தந்து நம் சமயஞ் சிறக்க ஆம் தொண்டுகளையாற்ற நீல மேனி வாலிழை பாகத்தொருவன் அருள் சுரப்பானாக.

வாழ்க கோவை கிழார்.

# இந்தியப் பிரதமர் சாஸ்திரி மறைவு!

(ஆசிரியர்)

ருஷ்ய நாட்டில் உள்ள டாஷ்கெண்ட் நகரில் அந்நாட்டுப் பிரதமர் கோசிஜின் ஏற்பாடு செய்திருந்த இந்தியப் பாகிஸ்தான் சமரசப் பேச்சுக்குச் சென்ற இந்தியப் பிரதம மந்திரி லால்பகதூர் சாஸ்திரி 11-1-66 காலை 1-32 மணிக்கு டாஷ்கெண்டிலேயே மார்படைப்பால் காலமானர் என்ற செய்தியைக் கேட்டு இந்திய நாடு பெரும் துக்கத்துக்குள்ளாகியிருக்கிறது. 1964 மே மாதம் நேரு இறந்தபோது இவர் பிரதம மந்திரியானர். 19 மாதமே பதவியில் இருந்திருக்கிறர். பாகிஸ்தான் போர் ஆகிய மிகப் பெரிய பிரச்சினையை இவர் சமாளிக்க வேண்டியிருந்தது. பகட்டான உருவமில்லாவிட்டாலும், அடக்கமான முறையில் மிகவும் உறுதியாக அப் பிரச்சினையை இவர் சமாளித்தமை இந்நாட்டுக்குப் பெருமை தருவதாயுள்ளது. நேருவுக்குப் பிறகு யாரும் பேர் சொல்ல முடியாது !என்று இருந்த அரசியல் நிலையை இவர் தமது உறுதியாலும் அடக்கத்தாலும் பெருமை தரத்தக்க விதமாகச் சமாளித்தார். பேச்சில் விருப்பமின்றி, எங்கும் செயலையே பிரதானமாய்க் கருதி வந்தார். பேச்சிலும் நடத்தையிலும் மிக்க நிதானமுடையவர். கூர்ந்த பகுத்தறிவுடன் பிரச்சினைகளைக் கண்ணியமாகவும் உறுதியாகவும் சமாளித்து வந்தார். டாஷ்கெண்ட் மகாநாட்டில் நன்முடிவு ஏற்படாதோ என்றிருந்த நிலையை மிக்க விவேகத்தோடு மாற்றியமைக்கவும் இவர் காரணமாயிருந்தார்.

வடமொழிப் பாண்டித்தியத்தால் சாஸ்திரி என்ற பட்டம் பெற்றிருந்த லால்பகதூர், இந்திய சுதந்திரப் போரில் ஈடுபட்டுப் பலமுறை சிறை சென்று பல ஆண்டுகள் சிறையில் கழித்தவர். நேரு மந்திரி சபையில் பல மந்திரி பதவிகளை வகித்திருந்து, தாமாகப் பதவியை விட்டார். சமீபத்தில் தான் இவருக்கு 61 வயது பூர்த்தியாயிற்று.

இந்த அரசில் இப்போது ஆள் பஞ்சம். நிதானம் தவருது நேர்மையும் பண்பும் திறனும் வாய்ந்த தலைவர்கள் பஞ்சம். இந்த நிலையில் இவரை இழந்தது தேசத்தின் துர்ப்பாக்கியம். ஆண்டவன் இவருடைய ஆன்மா சாந்தி பெற அருள் செய்து, இந்திய நாடும் நல்ல பாதையில் விவேகத்துடன் ஓங்கி வளரவும் அருள் பாலிப்பானாக.

# சமாஜச் செய்திகள்

12—2—'66, 13—2—66 சனி ஞாயிற்றுக் கிழமைகளில் காலை 9-30 மணிக்கு சமாஜச் செயற்குழுக் கூட்டமும் பொதுக்குழுக் கூட்டமும் அலுவலகத்தில் நிகழும். சட்டத் திருத்தமும் பிறவும் முடிவுசெய்யப் பெறும். உறுப்பினர்கள் யாவரும் வருமாறு கேட்டுக் கொள்ளப் பெறுகிறார்கள்.

## சைவ சித்தாந்தம்-ஆங்கில முத்திங்கள் பத்திரிகை

நமது சமாஜம் வெளியிடும் ஆங்கில முத்திங்கள் பத்திரிகை, "சைவசித்தாந்தம்" சிதம்பரத்தில் நடந்த வைர விழாவில் 31—12—65-ல் வெளிவந்தது. பத்திரிகை நல்ல முறையில் அமைந்துள்ளது. அருமையான கட்டுரைகள் பதினைந்துக்குக் குறையாமல் அடங்கியுள்ளன. கட்டுரை எழுதியவர்கள் யாவரும் கற்றறிந்த பெருமக்கள் ஆவர். பத்திரிகைக்குக் கையொப்பம் செலுத்தியும், விளம்பரம் தந்தும், மதிப்புரைக்கு நூல்கள் அனுப்பியும், தக்க கட்டுரைகள் வழங்கியும், நன்கொடைகள் தந்தும் ஆதரவு தருமாறு வேண்டப்படுகிறது. திரு. ஜெ. எம். நல்லசாமி பிள்ளை நடாத்திய 'சித்தாந்ததீபிகை' 1914-ல் நின்றபின் இதுவரை ஆங்கிலத்தில் சைவசித்தாந்தத்தை விளக்க ஒரு பத்திரிகையை நடத்த செல்வமும் வசதிகளும் பெற்ற ஒருதரத்தாலும் ஏற்பாடுசெய்யவில்லை. நம் சமாஜம் இந்த மகத்தான பணியை ஏற்றுள்ளது. அது இறைவனருளாலும், சைவர்களின் உழைப்பாலும் வெற்றிபெறுக! இன்றே சந்தாதாரராகச் சேருங்கள் சந்தா ரூ. 5-00.

—நல். மு.

இவ்வாண்டு இதுகாறும் ஆயுள் உறுப்பினர் ஆகியோர் விவரம் வருமாறு :-

1. டாக்டர் K. ரங்கசாமி, மயூரா க்ளினிக், முருக பிள்ளை தெரு, சிதம்பரம்.

2. டாக்டர் M. நடராசன், 1/3 லாண்டன்ஸ் ரோடு, சென்னை-10.

3. V. மருதவாணம் பிள்ளை, பின்னலூர் P. O., சிதம்பரம் தாலுகா.

4. A. முத்துக்குமரசாமி முதலியார், 4. புதுப் பேட்டை வடக்குத் தெரு, சிதம்பரம்.

5. A. நடேசமுதலியார், 37/38 புதுப்பேட்டை வடக்குத் தெரு, சிதம்பரம்.

6. R. இராமலிங்கம் பிள்ளை, ஓரத்தூர் கிராமம் P. O., சிதம்பரம் தாலுக்கா.

7. ச. சிவகுமாரன், 192. லாயிட்ஸ் ரோடு, சென்னை-14.

## சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்

சமாஜ உறுப்பினர்கள் தங்கள் சந்தாத்தொகை ரூபாய் மூன்றை விரைவில் அனுப்பி வைக்க வேண்டுகின்றோம். வி. பி பி. யில் அடுத்த மாத இதழை அனுப்புவதாயின் 75 புதுக்காசுகள் வீணாக அதிகம் செலுத்த வேண்டியிருக்கும், மணியார்டர் மூலம் சந்தா அனுப்புவோர் 1. தங்கள் முழுப்பெயர், 2. சந்தா எண், 3. தெளிவான முழு விலாசம் ஆகியவற்றைக் குறித்தனுப்புதல் வேண்டும்.

ஈழநாட்டில் உள்ள அன்பர்கள் அரசியலார் இசைவு பெற்றுத் தங்கள் சந்தாத் தொகையினைத் தவறாது அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்கிறோம்.

மலேசியா நாட்டில் உள்ள சமாஜ அன்பர்கள் தங்கள் சந்தாத் தொகையை திரு. சிவநேசன் அவர்களிடத்துச் செலுத்துமாறு கேட்டுக் கொள்ளப்பெறுகிறார்கள். சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12. கீழ மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4.

## தை மாத விசேட தினங்கள்

| | | |
|---|---|---|
| 3 | (16—1—66) | திருநீலகண்ட நாயனார் விழா |
| | ,, | தாயுமானவர் விழா |
| 11 | (24—1—66) | அப்பூதியடிகள் விழா |
| 14 | (27—1—66) | கலிக்கம்பநாயனார் விழா |
| 19 | (1—2—66) | கண்ணப்ப நாயனார் விழா |
| 20 | (2-2—66) | அரிவாட்டாயநாயனார் விழா |
| 23 | (5—2—66) | தைப்பூச விழா |
| 26 | (8—2—66) | சண்டேசுரநாயனார் விழா |

## பிற செய்திகள்

மதுரை சைவ சித்தாந்த சபை ஆதரவில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களின் 86-வது ஆண்டு நினைவு விழா திரு G. கலியாணம் பிள்ளை அவர்கள் தலைமையில் 14—12—65 அன்று நிகழ்ந்தது. பலர் நாவலரவர்களின் பெருமை பற்றிப் பேசினர்.

ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜனசபையில் கார்த்திகைச் சோமவார நிகழ்ச்சிகள் சிறப்பாய் நிகழ்ந்தன. 22-11-65, 29—11—65, 6—12—65, 13—12—65 ஆம் நாட்களில் திருவாளர்கள் சே. த. இராமலிங்கம் பிள்ளை, பி.ஏ. எல்.டி., காமாட்சிதாசர் ஆர். சோமசுந்தர அய்யர், வித்துவான் அம்பை, இரா. சங்கரனார், திரு பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ., ஆகியோர் முறையே சிர்பாத வகுப்பு, திருப்புகழ் பஜனை, தாயுமானர் திறன், தொண்டர்க்குத் தொண்டர் என்பன பற்றி விரிவுரைகள் நிகழ்த்தினர்.

நிகழும் விசுவாவசு ஆண்டு மார்கழி (16—12—65) முதல் சங்ககிரி அருள்நெறிக் கழகத்தாரால் சங்ககிரி ஸ்ரீ சௌந்திரவல்லி சோமேஸ்வரப் பெருமான் திருவாலயத்தில் விடியற்காலை பிரதி தினமும் 4-30 மணி முதல் 6-30 மணி வரை வித்வான் தி. செ. கந்தசாமி பிள்ளை அவர்களால் திருவெம்பாவையும், திருப்பள்ளியெழுச்சியும் பாராயணஞ் செய்து பஞ்ச புராணம் ஓதியும் வழிபாடு நடைபெற்று வந்தது.

புரசைத் திருநெறிக் கழகத்தின் சார்பில் திருவெம்பாவைச் சொற்பொழிவுகள் சித்தாந்தம் துணையாசிரியர் வித்துவான் அம்பை சங்கரனாரால் 16-12-65, 23-12-65, 6—1—66, 7—1—66, 13—1—66 தேதிகளில் நிகழ்த்தப் பெற்றன. 14—1—66ல் பாராட்டுவிழா நிகழ்ந்தது.

மேற் குறித்த கழகத்தின் 58-ஆம் திங்கள் வழிபாடு 18—12—65, 19—12—65-ஆம் நாட்களில் சோழலிங்கபுரத்திலும் காஞ்சி கைலாசநாதர் கோவிலிலும் நிகழ்ந்தது.

59-ஆம் திங்கள் வழிபாட்டு விழா 16—1—66ல் தேனம்பேட்டை பாலசுப்பிரமணியர் ஆலயத்தில் நிகழ்ந்தது

கோவை மாவட்டம் புன்செய்ப் புளியம்பட்டியில் திருமுருகன் கோவிலும் மறைமலையடிகள் மன்றத்திலும் 25—12—65 முதல் 29—12—65 முடிய திருவெம்பாவை விளக்கவுரையும் உண்மைவிளக்க சிவஞான போத வகுப்பும் முறையே காலையும்இரவும் நிகழ்ந்தன. திரு. மறைதிருநாவுக்கரசு அவர்கள் இவ்விரு நிகழ்ச்சிகளையும் செவ்வனே ஆற்றினர். 28—12—65 அன்று திருப்பாவை திருவெம்பாவை விழாவும் மறை திருநாவுக்கரசு அவர்கள் தலைமையிலேயே சிறப்புற நிகழ்ந்தது. பல அன்பர்கள் சொற்பெருக்காற்றினர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜ மணிவிழா

31—12—65, 1—1—66, 2—1—66ஆம் நாட்களில்

சிதம்பரம்

இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப்பள்ளியில்

நிகழ்ந்தபோது, வரவேற்புக்குழுத்தலைவர்

**திரு. R. கனகசபை M. P. அவர்கள்**

கூறிய

# வரவேற்பு நல்லுரை.

'செல்வ நெடுமாடம் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே'

சைவப் பெருமக்களே, தாய்மார்களே, இளைஞர்களே,

சிவ ராசதானி எனப்போற்றப்பெறும் இத்தில்லையம்பதியிலே சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 60-ஆம் ஆண்டு நிறைவு விழாவுக்கெனத் தமிழ் நாட்டின் பல்வேறிடங்களிலிருந்தும் இலங்கை மலேசியா ஆகிய புறநாடுகளிலிருந்தும் இங்கு வந்துள்ள சைவப் பெருமக்களாகிய அனைவரையும் வருக! வருக! என உளமுவந்து அழைக்கின்றேன்.

நமது சைவசமயம், மிகவும் பழமை வாய்ந்தது; உலகத்தார்பலரும் உவந்து ஏற்றுக்கொள்ளும் கருத்துவளர்ச்சியினை உடையது; மக்கள் தங்களைக் குறித்தும் தாங்கள் வாழும் உலகத்தைக் குறித்தும் உலகினை உள்ளும் புறமும் கலந்துநின்று இயக்கும் பரம்பொருளாகிய கடவுளைக் குறித்தும் நூலறிவாலும் வாழ்க்கை அநுபவங்களாலும் தெளிய உணர்ந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது; கடவுள், உயிர், உலகம் என்னும் இம்மூன்றும் என்றும் நிலையாக உள்ள பொருள் எனக் கொண்டு, இவ்வுலக மக்கள் நிலையான இன்பத்தினை இப்பிறவியிலேயே அடைதற்குறியவழியினை வகுத்துக் காட்டுவது. சரித்திர காலத்திற்கு முன் தொடங்கி நம் நாட்டில் குமரி முதல் இமயம் வரை பரவிய பழம் பெருஞ் சமயம் நம் சைவ சமயமே என்பதனை அறிஞர் பலரும் நன்கறிவார்கள். சைவ சமயம் நம் பாரத நாட்டில் மட்டுமல்லாமல் உலக நாடுகள் பலவற்றிலும் ஒரு காலத்திற் பரவியிருந்த

தென்பது அந் நாடுகளில் கிடைக்கும் சிவலிங்கத் திருவுருவங்களால் அறியப்படும். எல்லா நாடுகளிலும் பொதுமுறையிற் பரவிய சைவம், நம் தென்ஞட்டில் சைவ சித்தாந்த சமயம் எனச் சிறப்புமுறையில் நிலை பெற்றுள்ளது.

'தென்ஞடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'

என மாணிக்கவாசகர் இறைவனைப் போற்றியுள்ளார்.

சாதி மத வேறுபாடின்றி இந் நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் சரிநிகர் சமானமாக வாழும் நெறிமுறைகளை அரசியல் அடிப்படையில் அமைத்துக்கொண்ட நாடு, நம் பாரதநாடு. உலக மக்கள் அனைவரையும் ஒருகுலத்தாராக மதித்து, அவரவர்கள் மேற்கொண்டுள்ள சமய வழிபாட்டு முறைகள் அனைத்தையும் ஒப்பக்கருதும் பொது நோக்கு, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே நம் தமிழ் நாட்டில் நிலை பெற்று வந்துள்ளது. இவ்வுண்மை சங்க இலக்கியங்களைக் கற்றவர்களுக்கு நன்ருகத் தெரிந்ததே. மக்கள் எல்லோரையும் ஒரு குலத்தாராக மதித்து அவர்களால் பலவுருவங்களில் வைத்து வழிபடப்பெறும் கடவுள் ஒன்றே எனவுணர்ந்து வழிபடும் முறையினை நமது சைவசமயப் பெரியோர்கள் நெடுங் காலத்திற்கு முன்னரே அறிவுறுத்தியுள்ளார்கள்.

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'

எனவரும் திருமூலர் திருமந்திரம் இவ்வுண்மையை விளக்குதல் காணலாம்.

பலதிறப்பட்ட மக்களது அறிவு நிலைகளுக்குத் தக்கவாறு உலகில் வழங்கும் எல்லாச் சமயங்களையும் மெய்ப்பொருளை அடைதற்குரிய வழியின் படிகளாகக் கொண்டு அவையெல்லாவற்றுக்கும் மேலாகச் சமயங்கடந்த சமரச நிலையில் விளங்குவது சைவசமயம் எனப்பெரியோர் கூறுவர். சைவ சமயத்தின் தத்துவக் கொள்கையானது, இக்கால அறிவியல் ஆராய்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் முறையில் அமைந்துள்ளது; மக்கள் எல்லோரும் செல்வர், வறியவர் என்னும் வேறுபாடுகளை மறந்து சிவபரம்பொருளுக்குத் தாம் என்றும் அன்பிஞல் அடியவர்களே என்னும் தெளிவு பெற்றுச் சமுதாய வாழ்வில் எல்லோரும் சமமே எனக்கருதி ஒன்றுபட்டு வாழ்வதற்கு ஊக்கமளிக்கும் முறையில் அமைந்தது நம் சமயம். இது பற்றியே 'சைவ சமயமே சமயம்' என்றும், 'முத்தி தரும் தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாரும் செகத்தீரே' என்றும் எல்லோரையும் அன்புடன் அழைக்கின்ருர் தாயுமாஞர்.

நமது தமிழ் வேந்தர்கள் காலத்தில் உயர் நிலையில் விளங்கிய சைவசமயமானது, நம் நாடு உரிமையிழந்து அரசியலில் அடிமையுற்றநிலையில் சைவக் குடும்பத்திற் பிறந்தவர்கள் தம் சமய வுண்மைகளை உணர்ந்து அதன்படி ஒழுகாமை யாலும் ஒருசிலர் வேற்றுச் சமயங்களைத் தழுவின மையாலும், ஒரு சிலர் தம் முன்ஞேர்களது தெய்வக் கொள்கையினை உள்ளவாறு உணரும் வாய்ப்பின்றி இகழ்ந்தமையாலும் தன் பெருமை

குன்றித் தளர்வதாயிற்று. இந்நிலையில் நம் சைவ சித்தாந்த சமயத்தின் உயர்ந்த தத்துவ உண்மைகளையும் சிவ வழிபாட்டின் சிறப்பினையும் தமிழ் மக்கள் அனைவரும் நன்குணர்ந்து பயன்கொள்ளுதல் வேண்டும் என்ற நன்னோக்கத்தால் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள் முதலிய பெரியோர்களால் இன்றைக்கு அறுபதாண்டுகளுக்கு முன்னே தோற்றுவிக்கப் பெற்றது, இச் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம் என்பதனை இங்குள்ளோர் பலரும் தெரிந்திருப்பார்கள்.

சைவசமயத்தினை நாடெங்கும் பரவச் செய்தலையே தனது குறிக்கோளாகக்கொண்டுள்ள இச்சமாஜம், ஆண்டுதோறும் சிறந்த முறையில் விழா நடத்துவதுடன், சித்தாந்தம் என்ற மாதப் பத்திரிகை வாயிலாகவும் சமயவுண்மைகளைப் பலரும் அறியச் செய்து வருகிறது. பன்னிரு திருமுறை நூல்களையும் சைவ சித்தாந்த சாத்திரவுரைகளையும், திருப்புகழ், சங்க இலக்கியம், சீவக சிந்தாமணி போன்ற தமிழ் நூல்களையும் யாவரும் எளிதில் வாங்கிப் பயிலும்படி முதன்முதலாக அடக்க விலைக்கு வெளியிட்டுப் பரப்பிய பெருமை, இச் சமாஜத்திற்குரிய தனிச் சிறப்பாகும். இம் மணிவிழாவிலே சமாஜத்தின் சார்பில் 'சைவ சித்தாந்தம்' என்ற ஆங்கிலப் பத்திரிகை, அற நிலையஆணையர் திரு. S. சாரங்கபாணி முதலியார் அவர்களால் வெளியிடப்பெறுவது அறிந்து மிகவும் மகிழ்கின்றேன். நம் முன்னோர்கள் விளக்கியுள்ள

சைவ சித்தாந்த உண்மைகள், ஆங்கிலத்தில் வெளிவந்தால்தான் நம் சமயத்தின் தனிச் சிறப்பினை உலகிலுள்ள அறிஞர்கள் உள்ளவாறு அறிந்துகொள்ளும் வாய்ப்பு உண்டாகும்.

சைவ சித்தாந்த சமாஜம் இவ்வாறு அறுப தாண்டுகளாகச் சைவ சமய வளர்ச்சிக்கு ஆக்க மாகும் பணிகளைச் செய்து வந்துளது. ஆயினும் இப்பணிகளைத் தொடர்ந்து திறம்பெறச் செய்தற் குரிய நிதி வசதியோ, நிறைந்த உறுப்பினர்களது எண்ணிக்கையோ இதற்கு அமையாதது ஒரு பெருங் குறையாகவேயுள்ளது. சைவ அன்பர்கள் பலரும் பெருந்திரளாக இச் சமாஜத்தின் உறுப் பினர்களாகச்சேர்ந்து இதன் தொண்டுகள் இனிது நிகழப் போதிய ஆதரவு அளிக்கும்படி வேண்டிக் கொள்கின்றேன்.

சைவ சித்தாந்த சமாஜத்தின் மணிவிழா, சைவர்களால் கோயில் எனப் போற்றப்பெறும் பெருமை வாய்ந்த சிதம்பரத்திலே நிகழ்வது மிகவும் பொருத்தமாகும். இச் சமாஜத்தின் பொன் விழா பத்தாண்டுகளுக்கு முன்னே இங்கு இளமை யாக்கினார் திருக்கோயிலில் சிறப்பாக நடை பெற்றது இங்குள்ள பலர்க்கும் நினைவிருக்கும். அப்பொழுது பொன்விழாவைத் தமது சொந்தப் பொறுப்பில் நடத்திய பெரியவர்கள் இருவராவர். ஒருவர், நம் அன்புக்குரிய திருவாளர் செ. இரத்தின சாமிச் செட்டியார் அவர்கள். மற்றொருவர் என் தந்தையார் ஆடூர் இரத்தினசபாபதி பிள்ளையவர் கள் என்பது இங்குள்ள பலரும் அறிந்த செய்தி யாகும்.

நமது பாரதநாடு இருபுறத்திலும் பகைவரது தாக்குதலை எதிர்த்து நின்று எதிர்கால முன்னேற்றிற்கு இன்றியமையாத திட்டங்களை நிறைவேற்றும் பெருமுயற்சியில் ஈடுபட்டுள்ளது. இந்நிலையில் நம் நாட்டு மக்கள் புறத்தேதங்கிய பகைவரது படைத் தாக்குதலுக்குச் சிறிதும் மனங்கலங்காது தங்கள் வாழ்க்கை வசதிகளை ஓரளவு குறைத்துக்கொண்டு தமக்குரிய கடமைகளை விழிப்பாக இருந்து நிறைவேற்றவேண்டிய நெருக்கடியானகாலம் இது. இத்தகைய நெருக்கடி நிலைமையேற்பட்ட காலத்தும் மக்கள் மனதிலே எதற்கும் கலங்காத தெளிவுநிலை ஏற்பட வேண்டுமானுல் அவர்கள் உறுதியான தெய்வ நம்பிக்கையுடையவர்களாக இருத்தல் அவசியம். இத்தகைய தெய்வ நம்பிக்கையை வளர்க்குமுகமாக 'அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்சவருவதும் இல்லை' என்னும் திண்மையான வுள்ளத்துடன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாள ராக வாழும் வாழ்க்கை முறையினை நிலைபெறச் செய்வதில் நம் சமாஜம் போன்ற சங்கங்களின் தொண்டுநாட்டுக்கு மிகவும் தேவைப்படுவதாகும்.

நமது வேண்டுகோட்கிணங்கி இம் மணி விழாவிலே அன்புடன் வந்து கலந்து கொள்பவர்கள், நாடறிந்த பெரியவர்கள். பாரத நாட்டிற் பல இடங்களிலும் கடல் கடந்த இலங்கை மலேயா முதலிய வெளிநாடுகளிலும் சென்று செந்தமிழும் சிவநெறியும் பரப்பிவரும் அருள்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியாரவர்கள் இவ்விழாவில் சைவர் மகாநாட்டின் தலைவராக இசைந்து

இங்கு வந்துள்ளமை, நம் எல்லோர்க்கும் மகிழ்ச்சி யளிக்கும் நிகழ்ச்சியாகும். தாய்மொழி வளர்ச்சி யிலும் சமயவுண்மைகளையுணர்ந்து கொள்வதிலும் பேரார்வமுடையவரும் தமிழ்நாட்டுச்சட்டமன்றத் தலைவரும் ஆகிய உயர்திரு. செல்லபாண்டியன் பி. ஏ., பி எல். அவர்கள், மாநாட்டைத் திறந்து வைப்பதற்கு இசைந்து இங்குவந்திருப்பதுநமக்குப் பெருமையளிப்பதாகும். தமிழிலும் சமயத்திலும் ஈடுபாடுடைய நம் தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித்தலைவர் உயர்திரு. T. V. வாசுதேவன் ஐ. ஏ. எஸ். அவர்கள் இம்மாநாட்டில் கொடி யேற்றிவைக்க இசைந்துள்ளார்கள். மதுரை மீனாட்சி ஆலை உரிமையாளரும் தியாகராச கல்லூரியை மதுரையில் நிறுவிச் கல்விப் பணி புரிபவரும் தமிழிலும் சைவத்திலும் பேரார்வமுடை யவரும் ஆகிய உயர்திரு. கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்கள் வாழ்க்கைத் துணைவியார் திருமதி. இராதா தியாகராசன் அவர்கள் சைவ மங்கையர் மாநாட்டுத் தலைவராக இசைந்து இங்கு வந்திருப்பது சைவ மங்கையர் எல்லோர்க்கும் ஊக்கமும் உவகையும் அளிப்பதாகும். சென்னை மாநிலக்கல்லூரி வடமொழிப்பேராசிரியர் உயர்திரு பெ. திருஞானசம்பந்தம் பிள்ளை எம். ஏ. அவர்கள் நம் தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்தவர் கள் அவர்கள் சைவ இளைஞர் மாநாட்டிற்கும் சைவப் புலவர் மாநாட்டிற்கும் தலைவராக வந் திருப்பது நமக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. சென்னையில் ஆங்கில மருத்துவத் துறையிற் புகழ் பெற்று விளங்குபவரும் தில்லையம்பலப்பெருமான்

திருவடியில் அளவில்லாத பேரன்புடையவரும் ஆகிய திருவாளர் டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்கள் சைவ மங்கையர் மாநாட்டின் தொடக்க உரை நிகழ்த்த அன்புகூர்ந்து இசைந்துள்ளார்கள். இறைவன் ஐந்தொழில் ஆடல்புரியும் திருத்தலமாகிய இத் தில்லையம்பதியிலே நிகழும் மணிவிழாவிற் கலந்துகொண்டு சிறந்த பொருளுரைகளை வழங்குவதற்கெனத் தமிழ் நாட்டில் தலைசிறந்த புலவர் பெருமக்களும் பேரறிஞர்களும் நமது வேண்டுகோட்கிணங்கி இங்கு வந்திருப்பது மணிவிழாவுக்குப் பொலிவுதரும் நிகழ்ச்சியாகும்.

இவ்விழாவிலே கலந்து கொண்டு சைவ சித்தாந்த சமயத்தின் நுண்பொருள்களைக் கேட்டு மகிழும் விருப்புடன் தமிழ் நாட்டிற் பல மாவட்டங்களிலிருந்தும் இலங்கையிலிருந்தும் மலேயாவிலிருந்தும் சைவப் பெருமக்கள் பலர் இங்கு வந்திருப்பது எங்களுக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது.

இவ்வாறு நம் சமாஜத்தின் மணிவிழா சிறப்பாகநிகழத் திருவருள் புரிந்தருளும் நடராசப் பெருமானை வணங்கி, இங்குத் திரளாக வந்துள்ள சைவப் பெருமக்களாகிய உங்கள் எல்லோரையும் வருக வருக என உவகையுடன் வரவேற்று வரவேற்புக்குழுவின் சார்பில் எனது அன்புகலந்த வணக்கத்தினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.



உ

முருகா !

## சைவ சித்தாந்த மகா சமாஜ

# 60-ஆம் ஆண்டு விழா

---

## சைவர் மாநாட்டுந் தலைமைப் பேருரை

## (திருமுருக. கிருபானந்த வாரியார்.)

**(31—12—1965)**

...........o.........

உலகம் பலவிதம் என்பது பழமொழி. இதற்கு என்ன பொருள்? உலகம் பலவிதம் என்று பதச்சேதஞ் செய்து உலகம் பலவிதமாக இருக்கின்றது என்று பொருள் செய்கின்றூர்கள். அது அத்துணைச் சிறந்த பொருளன்று. ஏன்? உலகம் ஒரு விதமாகத்தானே இருக்கின்றது? மக்களைப் பெறுவது பெண்கள்தானே? உண்பதும் உறங்குவதும் ஒன்றுபோல்தானே? பலவிதம் இல்லை யல்லவா?

உலகு அம்பலவிதம் என்று பதச்சேதஞ் செய்தல்வேண்டும். அம்பலத்திலே இறைவன் ஆடுகின்றுன். உலகம் இனிது நடைபெறுகின்றது.

கண்ணுடியில் தெரிகின்ற நிழலை அசைக்கும் பொருட்டுத் தான் அசைவதுபோல், அகில உலகங்களும் அசையும் பொருட்டு இறைவன் அசைகின்றுன்.

இவ்வாறு இறைவன் ஆடத்தொடங்கிய காலம் எது என்று ஆராய்வாருக்கு அறிவுரை கூறுவார்போல் சேக்கிழார் பெருமானுர்,

" மாதொரு பாகம் நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே
ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் தனிக்கூத் தாடும்
நாதனுர்............ "

என்கின்றுர்.

இறைவனுடைய ஆனந்தக் கூத்துக்கு ஆரம்பமும் இல்லை; அந்தமும் இல்லை. அத் திரு நடனத்தால், ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம் பெருந் தொழில்களும் நடைபெறுகின்றன.

நம்முடைய இதய கமலத்திலே யுள்ள தகராகாயத்திலே ஒரு அசைவு நடைபெறுகின்றது. அதனால் இந்த உடம்பு அசைகின்றது. இதயத்தின் உள்ளசைவு இல்லையானால் உடம்பு அசையாது. அசையாத உடம்பை நான்கு பேர் சேர்ந்து அசைத்துவிடுவார்கள்.

இவ்வாறு உயிர்கள்தோறும் நின்று அசைந்து அசைக்கின்ற பொருள் **சிவம்** எனப்படும். சிவம் இல்லையானால் சவம் எனப்படும்.

சிவம் என்பது மங்கலம் எனப்படும். சிவத்துடன் தொடர்புடையது சைவம்.

தில—எள். திலத்தின் தொடர்புடையது தைலம்.
சிலா—கல். சிலாவின் தொடர்புடையது சைலம்.
சிவ—மங்கலம். சிவ சம்பந்தமுடையது சைவம்.

இதனை யுணர்ந்தவன் சைவன்.

" நின்றதுவும் சரிப்பதுவும் சைவமே யாய் "

என்பார் திருஞான சம்பந்தர்.

சிவம் பேரொளிப் பிழம்பாகத் திகழ்கின்றது. ஒளி மேல்நோக்குந் தன்மையது. அதனால் அக்கினி மேல்நோக்கி எரிகின்றது.

மேல்நோக்கித் திகழ்வது சிவ சோதி.
அதைச் சூழ்ந்துள்ளது அருட்சோதி.
அது ஆன்ம சோதியில் தங்கியுள்ளது.

இந்த மூன்றும் ஒன்றுசேர்ந்த ஒரு அருளமைப்பே **சிவலிங்கம்**.

சிவலிங்கத்தின் மேல்நோக்கிய வடிவம் சிவசோதி. அதனைச் சூழ்ந்து ஆன்மாவையே நோக்கியுள்ள ஒன்று அருட்சோதி. அடியில் உள்ள வட்டமான வடிவம் ஆன்மசோதி.

" சோதியுட் சோதியுட் சோதி "
என்று அருட்பிரகாச வள்ளலார் பாடுகின்றார்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே

என்பது திருமந்திரம்.

**பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரன்** இந்த நான்கும் உருவத் திருமேனிகள்.

**சிவம், சக்தி, நாதம், விந்து** இந்த நான்கும் அருவத் திருமேனிகள்.

**சதாசிவம்** என்ற சிவலிங்கம் உருவாருவத் திருமேனியாகும்.

இந்த " நவந்தரு பேதங்கொண்டு நடிப்பவன் நாதன்தானே " என்று சிவஞானசித்தியார் கூறுகின்றது.

ஆதலால் சிவலிங்க வழிபாடு செய்வது இன்றியமையாதது. சிவ லிங்கத்தை வழிபட்டோர் எல்லா நலன்களும் எளிதிற் பெறுவார்கள்.

சிவ பூசைக்குச் சிறந்த சாதனங்கள் திரு நீறு, உருத்திராட்சம், ஐந்தெழுத்து.

கருப்பு என்றால் யாருக்கும் வெறுப்பாக இருக்கும். வெண்மை யான ஒரு பொருளை நெருப்பில் இட்டால் கரியாகிவிடும். கரிய சாணத்தை நெருப்பில் இட்டால் வெண்மையாகின்றது.

எனவே, திரு நீறு அணிந்தால் உள்ளம் வெண்மையாகப் பால் போல் மாசற்றுத் திகழும். திருநீற்றை முறைப்படி ஐந்தெழுத்தோதி யணிவாரை நோயும், பேயுந் தீண்டமாட்டா.

திருநீறு தரித்துச் சிவபூசை செய்யாதார் ஏன் பிறந்தார்? என்று வினவுகின்றார் அதிவீரராம பாண்டியர்.

சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரார்—அவனிதனில்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்
ஏன் பிறந்தார் மானிடராய் இன்று.

உமை யம்மையார் காஞ்சி முதலிய திருத்தலங்களில் சிவலிங்க வழிபாடு செய்தார். விநாயகர் சிவபூசை செய்த தலம் திருச்செங்காட்டங்குடி. முருகவேள் வழிபட்ட தலம் திருமுருகன்பூண்டி. திருமால் சிவபூசை செய்து சக்கராயுதம் பெற்ருர். அத் தலம் திருவீழிமிழலை. பிரமா வழிபட்ட தலம் பிரமபுரம். இந்திரன் வழிபட்டான் மதுரையில். முத்தரும், சித்தரும், முனிவர்களும், இமையவரும், இப் பூதலத்தில் வந்து சிவலிங்கத் திருமேனியை அருச்சித்து அருள்பெற்ருர்கள்.

மைந்தனுகிய அபிமன்யு மாண்ட அன்றிரவுகூட அர்ச்சுனன் சிவபூசை செய்தான் என்று மகாபாரதம் கூறுகின்றது. இராமர் சிவபூசை செய்தார். கிருஷ்ணர் சிவபூசை செய்து வழிபட்டார். இராமேசுரமும், சோமநாதமும் சான்று பகர்கின்றன.

ஐந்தெழுத்தை ஓதுவார் உள்ளத்தில் ஞான ஒளி வீசும். ஓதாதார் உள்ளம் மருண்டு இருண்டு பாழ்படும்.

... ... ... ... ... ... " அரன்
அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான் "

என்கின்ருர் சேக்கிழாரடிகள்.

***சிவா சிவா*** என்பார் காலன் வயப்படார். பிராணவாயு ***வாசி*** எனப்படும்.

அது பன்னிரு அங்குலம் வெளிப்படுகின்றது. எட்டு அங்குலந் தான் உள்ளே புகுகின்றது. ஆதாயம் எட்டு. விரயம் பன்னிரண்டு.

வா. சி. வா—எட்டு அங்குலம். சி—நான்கு அங்குலம்.

வாசி வந்து நான்கு அங்குலம் விரயமாகின்றது. பன்னிரு அங்குலமும் உள்ளே செல்லவேண்டுமாயின் ***சிவா*** என்று செல்லும்.

" விட்ட எழுத்தை விடாத எழுத்தால்
கட்ட வல்லார் காலனைக் கட்ட வல்லாரே "

என்கின்றார் திருமூலர்.

விட்ட எழுத்து சிகாரம். விடாத எழுத்து வகர ஆகாரம். வாசி என்று வந்து, சிவா என்று திரும்புதல் வேண்டும்.

## ஐந்து உறுதிப் பொருள்கள் ;

கிருஷ்ணன் என்ற சொல்லுக்குக் கரியவன் என்று பொருள் கூறுவர் பலர். அது சிறந்த பொருளாகாது.

கிருஷ்—தோண்டுவது. ஆகு பெயராக நிலத்தைக் குறிக்கின்றது.
ந—நலம்.

எனவே கிருஷ்—நிலம்; ந—நலம். நிலத்துக்கு நலஞ்செய்கின்றவர் கிருஷ்ணர். துவாபர யுக முடிவிலே கிருஷ்ணவதாரம் நிகழ்ந்தது. கிருஷ்ணர் பூபாரந் தீர்த்து, பன்னிரு சோதி லிங்கங்களுள் ஒன்றான சோமநாதத்தை வழிபட்டு, மேற்கடலின் அருகில் இரண்ய நதிக் கரையில் ஒரு அரச மரத்தின்கீழ் சிவயோகத்து அமர்ந்தார். பகவான் வந்த வேலையை முடித்துக்கொண்டு புறப்படுகின்றார் என்பதையறிந்த முனிவரர்கள், ஆன்றோர்கள் அனைவருந் திரண்டு, கிருஷ்ணரை வணங்கி " எம்பெருமானே! நீர் இப்போது வைகுண்டம் போகின்றீர். இனி வரும் செம்மையில்லாத, வெம்மையான கலியுகத்தில் நாங்கள் எவ்வாறு உய்வு பெறுவோம் ? நாங்கள் கடைத்தேறும் வழியாது ? அருள் செய்யும் " என்று வேண்டி நின்றார்கள்.

அப்போது முனிகணங்களைப் பார்த்து, கிருஷ்ணமூர்த்தி தனது கடைசி உபதேசமாகக் கூறியருளினர். " முனிவர்களே! நீங்கள் ஏன் அறிவில்லாதவர்களைப்போல் அல்லல்படுகின்றீர்கள் ?

கருணையுடன் பிறை மதியைத் தலையில் சூடிய சிவபெருமானுடைய பாதமலர் உண்டு; அப் பாதமலரை அர்ச்சிக்க மலர் உண்டு; திருமஞ்சனம் புரிய குளிர்ந்த நீர் உண்டு ; வேத இதயமாகிய திருவைந்தெழுத்துண்டு ; ஐந்தெழுத்தோதி யணிய திருநீறு உண்டு. இந்த ஐந்து பொருள்களும் உங்கட்கு 'அரண்புரியும்.' அஞ்சன்மின் " என்று அருளிச் செய்தார்.

திங்களங் கண்ணிப் புத்தேள் சேவடிக் கமலமுண்டு;
கொங்கவிழ் மலருமுண்டு; குளிர்தரு புனலுமுண்டு;
நங்கும் அஞ்செழுத்து முண்டு; தவளவெண்ணீறு முண்டு;
வெங்கலிக் குடைவ தென்னே வெளிற்றறி வுடைய ரேபோல்?

ஆதலால் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பஞ்சாக்கரம் ஓதி, வெண்ணீறு பூசி சிவ வழிபாடு செய்வோர் கலிக்கு அஞ்ச வேண்டிய தில்லை.

யாண்டும் நீக்கமற நிறைந்திருக்கின்ற நிமலன் சிவலிங்கத் திருமேனியில் விளங்கித் தோன்றுகின்ருன். பசுவின் உடம்பெங்கும் பால் பரவி நின்ருலும் மடியில் அப் பால் வெளிப்படுமாறு என்றுணர்க.

எல்லா உயிர்களிலும் இறைவன் பாலில் படு நெய்போல் மறைய நின்றுளான். அப் பரமபதியை நினைந்து நினைந்து நெக்கு நெக்கு உருகி வழிபடும் அடியாரது திருவுள்ளத்தில் கடைந்த தயிரில் வெண்ணெய்போல் விமலன் வெளிப்பட்டு நிற்பன். அதனுல் ஆலயங்களையும், அடியாரையும் அரனுகவே வணங்குதல் வேண்டும்.

"மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்கின்றது சிவஞான போதம்.

திருக்கோயிலிற் சென்று இறைவனைக் கண்டவர் முத்தி கண்டவராவார்.

பண்டனைப் பண்டனையோது பெம்மானைப் பனிவரைகோ
தண்டனைத் தண்டனைத் தண்டனைச்செய்யுமுத் தண்டனைமு
தண்டனை யண்டர்தொழுந் திருமாற்பே றமர்ந்தமணி
கண்டனை கண்டனை யாயின்நெஞ்சே முத்திகண்டனையே.

ஆதலால் மனிதப் பிறவியை எடுத்த நாம் அனைவரும், அவ நெறியிற்செல்லாது, சிவநெறியைக் கடைப்பிடித்து, திருக்கோயில் வழிபாடு, பாராயணம், ஜெபம், தியானம், மனவொடுக்கம் முதலிய சாதனங்களைச் செய்து உய்வு பெறுவோமாக.



நேஷனல் (பவர்) பிரிண்டர்ஸ், சிதம்பரம்.

சிவமயம்

# சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்

(தொடக்கம்: 1905—பதிவு: 1915)

# 60-வது ஆண்டு அறிக்கை

++++++++++++++++

சைவ சித்தாந்த மகா சமாஜம் முதன் முதலில் திருப்பாதிரிப்புலியூரில் தவத்திரு. ஞானியாரடிகள் திருமடத்தில், விசுவாவசு ஆண்டு, ஆனித் திங்கள் 24-ஆம் நாள் (7 - 7 - 1905) வெள்ளிக்கிழமை தொடங்கப்பெற்றது. இன்றுவரை இறைவன் திருவருளால் மேன்மைகொள் சைவ நீதி உலகெலாம் விளங்க வேண்டுமென்ற பெரு நோக்கத்துடன் தொண்டாற்றி வருகின்றது. இச்சமாஜம் 11 - 11 - 1915 தேதியில் சங்கங்கள் பதிவுச் சட்டப்படி எஸ். 6 / 1915 - 16 எண்ணுகைப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

## 2. இவ்வாண்டின் சமாஜப் பணியாளர்கள்

தலைவர்: திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை, ஐ. ஏ. எஸ். (ஓய்வு)

துணைத் தலைவர்கள்: திரு. ராவ்சாகிப் நல். முருகேச முதலியார், பி.ஏ.
திரு. தி.கி. நாராயணசாமி நாயுடு, கடலூர்.

செயலாளர்: திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார், எம்.ஏ.

துணைச் செயலாளர்: திரு. மு. நாராயணசாமிமுதலியார்.

பொருட்காப்பாளர் : திரு. வி. ஆறுமுக முதலியார்.
பத்திராசிரியர் : திரு. மு. அருணசலம், எம். ஏ.
உதவிப் பத்திராசிரியர் : வித்துவான் திரு. அம்பை-இரா. சங்கரனர்.

செயற்குழுவினர்: திருவாளர்கள்-(1) அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ., (2) ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி., (3) ந. ரா. முருகவேள், எம். ஏ., எம்.ஓ.எல்., (4) பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம். ஏ., (5) பெ. திருஞானசம்பந்தம் பிள்ளை, எம். ஏ., எல். டி., (6) ஜி. வடிவேலாயுதம், எம். ஏ., (7) நே. த. கிருஷ்ண சாமி, எம்.ஏ., பி.டி., (8) எஸ். இராமசாமி, (9) வித்துவான் - பி. சொ. சண்முகம்பிள்ளை, (10) வித்துவான் - வை. குஞ்சிதபாதம் பிள்ளை, (11) எம். சந்திரசேகர முதலியார், (12) சி. வி. கிருஷ்ணமூர்த்தி.

### 3. சமாஜத்தின் 59-வது ஆண்டு நிறைவு விழா

மேற்படி விழாவும், சைவர், சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும், 25-12-64, 26-12-64 ஆகிய இரண்டு நாட்கள் கோவைக்கடுத்த திருப்பேரூரில் தவத் திரு.சாந்தலிங்கஅடிகளார் தமிழ்க்கல்லூரியில் சிறப்பாக நடைபெற்றன. மேற்படி மாநாடுகளுக்கு முறையே திரு. க. அரங்கசாமி முதலியார், பி. ஏ. அவர்களும், திருமதி. காமாட்சி குமாரசாமி, எம். ஏ., அவர்களும், திருச்சி ஜி. வரதராசப்பிள்ளை, பி. ஏ. அவர்களும் தலைமை தாங்கினர்கள். இவ்விழாவைத் திரு. தி. சு. அவினசிலிங்கம் செட்டியார், பி.ஏ., பி.எல். அவர்கள் திறந்துவைத்தார்கள். வித்துவான்-திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் கொடியேற்றினர்கள். திரு. நா. மகாலிங்கம், பி.எஸ்சி., எம். எல். ஏ. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். இம்மாநாட்டில் இளைஞர் மாநாட்டோடு கருத்தரங்கு

என்னும் ஒரு புதிய நிகழ்ச்சியும் நடைபெற்றது. இவ்விழாவினையும் மாநாடுகளையும் நடத்திக்கொடுத்த திரு. நா. மகாலிங்கம், எம். எல். ஏ., தவத்திரு. இராம சாமி அடிகள், தவத்திரு. சுந்தரம் அடிகள் ஆகியோருக்கு சமாஜம் நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

### 4. வள்ளலார் விழா

*31-1-65* மாலை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜனசபையில் திரு. கீ. இராமலிங்க முதலியார், எம். ஏ. அவர்கள் "இராமலிங்கர் நெறி" என்பது பற்றிப் பேசினார்கள். திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை, பி.ஏ., எல். டி. அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

### 5. கண்ணப்ப நாயனார் திருநாள்

*14-2-65* மாலை சிந்தாதிரிப்பேட்டையில், இளைஞர் ஒற்றுமை மன்றத்தின் ஆதரவோடு மேற்படி திருநாள் கொண்டாடப் பெற்றது. திரு. எம். கே. குமரவேல் செட்டியார் தலைமையில் சமாஜத்தலைவர் திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை அவர்கள் "கண்ணப்பர்" என்ற பொருள் பற்றிப் பேசினார்கள்.

### 6. காரைக்காலம்மையார் திருநாள்

*28-3-65* மாலை மயிலாப்பூர் ஸ்ரீவள்ளீஸ்வரர் தேவாலயத்தில் திருமதி காஞ்சனமாலை அம்மையார் அவர்கள் "காரைக்காலம்மையார்" என்னும் பொருள்பற்றிப் பேசினார்கள். திரு. எஸ். பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் தலைமை வகித்தார்கள்.

### 7. ஜப்பானிய அறிஞர் வருகையும் ஆங்கிலக் கருத்தரங்கும்

டோகியோ பல்கலைக்கழக வடமொழிப்பேராசிரியர் எம். ஹரா என்ற ஜப்பானிய அறிஞர் வருகையை முன்

விட்டு 11-4-65 மாலை இராயப்பேட்டை திரு. வி. க. மணி மண்டபத்தில் 'சைவ சித்தாந்தத் தத்துவம்' என்பது பற்றி ஆங்கிலத்தில் ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. மாநிலக்கல்லூரி வடமொழிப்பேராசிரியர் திரு. பெ. திரு ஞானசம்பந்தம்பிள்ளை, எம்.ஏ., எல்.டி. அவர்கள் தலைமை தாங்கினார்கள். திரு. எம். ஹரா, டாக்டர் தேவசேனாபதி, எம்.ஏ., பிஎச்.டி., திரு. நல். முருகேச முதலியார், பி. ஏ. ஆகியோர் சொற்பொழிவாற்றினர். சமாஜத் தலைவர் வரவேற்புரையும், செயலாளர் நன்றியுரையும் நிகழ்த்தினார்கள்.

## 8. திருநாவுக்கரசர் குருபூஜை விழா

26-4-65 மாலை திருவான்மியூர் ஸ்ரீ மருந்தீஸ்வரர் ஆலயத்தில் சென்னை அரசாங்கத் துணைச் செயலாளர் திரு. கெ. சிதம்பரம், பி. எஸ்சி. அவர்கள் தலைமையில் திரு. வித்துவான் அம்பை இரா. சங்கரனார் அவர்கள் "திருநாவுக்கரசர் வரலாறு" என்னும் பொருள் பற்றிப் பேசினார்கள்.

## 9. காலைக் கூட்டு வழிபாடு—ஆண்டு விழா

மலேயா திரு. கா. இராமநாதன் செட்டியார் துவக்கி வைத்த காலைக் கூட்டு வழிபாடு தினமும் திருமயிலைக் கபாலீஸ்வரர் ஆலயத்தில் நிகழ்ந்து வருகிறது. அதன் முதல் ஆண்டுவிழா 9-5-65ல் நடைபெற்றது. காலை ஸ்ரீ கபாலீச்சுரருக்குத் திருமுழுக்காட்டும் வழிபாடுகளும் நிகழ்ந்தன. திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்களும், திரு. கயப்பாக்கம் - சோமசுந்தரம் செட்டியார் அவர்களும் வாழ்த்துரை கூறினர். வழிபாட்டில் தவறாது கலந்து கொண்ட 5 சிறுவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

## 10. ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியார் - ஸ்ரீ சிவஞான சுவாமிகள் குருபூஜை விழா

*16-5-65* மாலை இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையில் டாக்டர் வ. ஆ. தேவசேனபதி, எம். ஏ., பிஎச்.டி. அவர்கள் தலைமையில் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், திரு. நல். முருகேச முதலியார் அவர்கள், திரு. கொ. நீ. சிங்காரவேலு முதலியார் அவர்கள் மேற்குறித்த பெரியார்களைப்பற்றிப் பேசினர்கள்.

## 11. ஸ்ரீ திருஞானசம்பந்தப் பெருமான் குருபூஜை விழா

*18-5-65* மாலை திருவான்மியூர் ஆலயத்தில் வழக்கறிஞர் திரு. T. K. சுப்பிரமணியபிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில் வித்துவான் திரு. வை. குஞ்சிதபாதம்பிள்ளை அவர்கள் "திருஞான சம்பந்தர்" என்னும் பொருள்பற்றி விரிவுரை நிகழ்த்தினர்கள்.

## 12. சேக்கிழர் விழா

*6-6-65* மாலை, சூளை, சிதம்பரேசுவரர் கோவிலில் திரு. ச. நடேச முதலியார் அவர்கள் தலைமையில் கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் "சேக்கிழார் சிறப்பு" என்னும் பொருள் பற்றிப் பேசினர்கள்.

## 13. மாணிக்கவாசகர் திருநாள்

*4-7-65* மாலை திருவல்லிக்கேணி அரசடிக் கற்பக விநாயகர் வசந்த மண்டபத்தில் மாகாணக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் - திரு. எம். இராசாக்கண்ணு, எம்.ஏ., பி.ஓ.எல்., எம்.இ.எஸ். அவர்கள் தலைமையில் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். அவர்கள் "மாணிக்கவாசகர் மாண்பு" என்னும் பொருள் பற்றிப் பேசினர்கள்.

## 14. சுந்தரர் திருநாள்

8-8-65 மாலை ஸ்ரீ கபாலீஸ்வரர் கோயிலைச் சார்ந்த தேவார பாடசாலையில் திரு. கீ. இராமலிங்க முதலியார், எம். ஏ. அவர்கள் தலைமையில் பேராசிரியர் திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம். ஏ., அவர்கள் "சுந்தரர் செந்தமிழ்" என்னும் பொருள்பற்றிப் பேசினார்கள்.

## 15. திருத்தொண்டர் புராண விரிவுரைகள்

ஒவ்வொரு சனிக்கிழமையும் மாலை 6-30 மணிக்கு சென்னை லிங்கிச்செட்டித் தெருவிலுள்ள ஸ்ரீ மல்லிகேச் சுரப்பெருமான் திருக்கோயிலைச் சார்ந்த சபைக் கட்டடத் தில், சித்தாந்த வித்தகர் - கயப்பாக்கம்-திரு. சோமசுந் தரம் செட்டியார் அவர்கள் சமாஜ ஆதரவில் பெரிய புராண விரிவுரை நிகழ்த்துகிறார்கள். இவ்விரிவுரைகளை 12-9-65 மாலை உயர் நீதிமன்ற நீதிபதி மதிப்புக்குரிய திரு. ஆர். சதாசிவம், பி. ஏ., பி. எல். அவர்கள் துவக்கி வைத்தார்கள். இவை திரு. அ. சோமசுந்தரம் செட்டி யார், எம். ஏ. அவர்கள் பொருளுதவியில் நடைபெறு கின்றன.

## 16. ஒரு சிறப்புச் சொற்பொழிவு

24-9-65 மாலை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிர மணிய பக்தஜன சபையில் திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை, பி. ஏ., எல். டி. அவர்கள் தலைமையில் தவத்திரு ஐயா றடிகள் "நாவுக்கரசர் அளித்த நற்செல்வம்" என்னும் பொருள்பற்றிப் பேசினார்கள்.

## 17. அருள்நந்தி சிவாச்சாரியார் குருபூஜை விழாவும், கருத்தரங்கும்

மேற்படி விழாவை முன்னிட்டு 29-9-65 மாலை மயிலாப்பூர், ஸ்ரீகபாலீச்சுரர் கோயிலைச் சார்ந்த தேவார

பாடசாலையில் "வினை — சைவ சித்தாந்தத்தின்படி" என்னும்பொருள்பற்றி ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. தத்துவப் பேராசிரியர் - டாக்டர் வ. ஆ. தேவசேனபதி அவர்கள் தலைமையில், திருவாளர்கள் - இராவ்சாகிப் நல். முருகேச முதலியார், ந. ரா. முருகவேள், கொ. நீ. சிங்காரவேலு ஆகியோர் பேசினர். டாக்டர் பி. நடராஜன், டி.லிட்., எம்.எல்.ஏ. அவர்கள் பார்வையாளராக இருந்து தம் கருத்துக்களைத் தெரிவித்தார்கள்.

18. உள்ளொளி நாட்டக் கூட்டம் (அந்தர் யோகம்)

*10-10-65* காலை முதல் மாலைவரை வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் உள்ளொளி நாட்டக் கூட்டம் ஒன்று நிகழ்ந்தது. இக்கூட்டத்தை முற்பகலில் திரு. கீ. இராமலிங்க முதலியார், எம்.ஏ. அவர்களும், பிற்பகலில் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி. அவர்களும் தலைமைதாங்கி நடத்தித் தந்தார்கள். இக்கூட்டம் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையார் ஆதரவில் நடைபெற்றது. சுமார் 50 அன்பர்கள் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். அவர்களுக்குப் பாடசாலையார் உணவு, சிற்றுண்டிகள் வழங்கி உபசரித்தனர். அவர்களுக்கு சமாஜத்தின் நன்றி உரித்தாகுக.

19. மாங்காட்டில் கந்தர் சஷ்டி விழா

சென்னைக்கடுத்த மாங்காட்டில் ஸ்ரீ சிவசண்முகானந்த பக்தசன சபையின் ஆதரவில் கந்தர் சஷ்டியையொட்டி ஒரு சிறப்புக்கூட்டம் நடைபெற்றது. திரு. மணவி இராமகிருஷ்ண முதலியார் தலைமையில் திருவாளர்கள் கோ. மு. முத்துசாமி பிள்ளை, நல். முருகேச முதலியார். வித்துவான் அம்பை சங்கரனர், நே. த. கிருஷ்ணசாமி முதலியார், மா. ப. தியாகராஜன், வி. ஆறுமுக முதலியார், கொ. நீ. சிங்காரவேலு ஆகியோர்

'முருகன் பெருமை" என்னும் பொருள் பற்றிப் பேசினர். குன்றத்தூர் பஞ்சாயத்து ஒன்றிப்புத் தலைவர் திரு. எம். வி. சோலையப்பன் அவர்கள் வரவேற்புரையும், வழக்கறிஞர் திரு. எம். ஆர். துரைசாமி ஐயர், பி.ஏ., பி.எல்., அவர்கள் நன்றியுரையும் நிகழ்த்தினர்கள்.

## 20. ஸ்ரீ மெய்கண்ட தேவர் திருநாள்

*30-10-65* மாலை திருவல்லிக்கேணி, அரசடி கற்பக விநாயகர் வசந்த மண்டபத்தில் தவத்திரு அழகர் அடிகளார் அவர்கள் "மெய்கண்டார்" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். இக்கூட்டம், சுவரொட்டிகள், ஒலிபெருக்கி முதலியன ஏற்பாடு செய்யப்பெற்று, சிறப்பாக நிகழ்ந்தது.

## 21. முதியோர் தேவார வகுப்பு

*13-4-64* தொடங்கிய முதியோர் தேவார வகுப்பு, மயிலை ஸ்ரீ வெள்ளீஸ்வரர் கோவிலில் ஞாயிறு தோறும் காலை *9* மணிக்குச் சிறப்பாக நடந்து வருகிறது.

## 22. சமாஜத் தேர்வு

*1964*ஆம் ஆண்டு *5* பேர் சைவப் புலவர் தேர்விலும், *4* பேர் இளஞ் சைவப் புலவர் தேர்விலும் வெற்றி பெற்றனர். பரிசுத்திட்டத்தின்படி. சைவப் புலவர் தேர்வில் முதல் வகுப்பில் வெற்றி பெற்ற திரு. முத்துக்குமாரசாமி திருஞானசம்பந்தம் பிள்ளை அவர்களுக்கு ரூ. *50/-* பரிசு வழங்கப்பெற்றது. *1965*ஆம் ஆண்டு *13* பேர்கள் சைவப் புலவர் தேர்விலும் *6* பேர்கள் இளஞ்சைவப் புலவர் தேர்விலும் கலந்துகொண்டனர். அவர்களில், முன்னையதில் *12* பேரும் பின்னையதில் *4* பேரும் தேர்வுபெற்றனர். திரு.

அ. பாலசுப்பிரமணியம் அவர்கள் முதல் வகுப்பில் தேர்வு பெற்றதால் அவருக்கு ரூ. 50/- இம்மாநாட்டில் பரிசாக வழங்க இருக்கிறது.

23. ஆங்கிலப் பத்திரிகை 'சைவ சித்தாந்தம்'

31-1-65 நடந்த செயற்குழுக் கூட்டத்தில் சமாஜத்தின் சார்பில் 'சைவ சித்தாந்தம்' என்னும் பெயரில் ஒரு ஆங்கிலப் பத்திரிகை ஆண்டிற்கு நான்கு இதழ்களாக வெளியிடுவதென்று தீர்மானிக்கப்பெற்றது. இப்பத்திரிகைக்கு ராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்களை ஆசிரியராகவும் திரு. மு. அருணசலம், எம்.ஏ. அவர்களைத் துணை ஆசிரியராகவும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்களை வெளியீட்டாளராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

இத்தீர்மானங்கள் 25–4–65ல் நடந்தசமாஜப் பொது உறுப்பினர்கள் கூட்டத்தில் உறுதிப்படுத்தப்பெற்றன. மேலும் அக்கூட்டத்தில் ஆங்கிலப் பத்திரிகை நடத்துவது சம்பந்தமாக சமாஜ விதிகள் திருத்தப்பெற்றன.

ஆங்கிலப் பத்திரிகை 29–5–65, 14–10–65 தேதிகளில் தலைமை மாநகர் மேஜிஸ்ட்ரேட் முன்பு பதிவு செய்யப்பெற்றது.

24. திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களின் சமயக் கட்டளை

சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள், சமாஜத்திற்கு ரூ. 1000 நன்கொடையாக நல்கி அத்தொகையை மூலதனமாக வைத்து அதன் வட்டியைக் கொண்டு பின்காணும் குருபூஜைச்

சொற்பொழிவுகளைத் தக்க முறையில் நிகழ்த்த வேண்டுமென்று தெரிவித்துள்ளார்கள் :—

1. திருநீலகண்ட நாயனார் குருபூஜை
2. மங்கையர்க்கரசியார் ,,
3. ஸ்ரீ உமாபதி சிவாசாரியார் ,,
4. ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் ,,

இவற்றுள் ஒன்றும் மூன்றும் கபாலீச்சுரத்திலும்' இரண்டு மயிலையிலுள்ள வேறு எந்த சிவாலயத்திலும், நான்கு இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையிலும் நிகழ்த்த வேண்டுமென்று தெரிவித்துள்ளார்.

அவ்வாயிரம் ரூபாயை இராயப்பேட்டை பிரிவு இந்தியன்பாங்கில் 10-12-65 அன்று இரண்டாண்டுக்குத் தவணை வைப்பாக (நெ. 022826) வைக்கப்பெற்றுள்ளது. சமாஜம் இப்பெரியாருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

### 25. புதிய உறுப்பினர் சேர்க்கை—

### திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களின் உதவி

வாலாசாபாத் மாசிலாமணி முதலியார் அவர்கள் ஒரே காலத்தில் சமாஜத்திற்கு ரூ. 300 வழங்கி 100 புது உறுப்பினர்களைச் சேர்த்தார்கள். அன்னாருக்கு சமாஜத்தின் நன்றி உரித்தாகுக.

### 26. பொதுக்குழு செயற்குழுக் கூட்டங்கள்

இவ்வாண்டில் பொது உறுப்பினர்கூட்டம் மூன்றும், செயற்குழுக் கூட்டம் பன்னிரெண்டும் நடைபெற்றன.

### 27. பொருள் நிலை

59-ஆவது ஆண்டு 1-12-64 முதல் 30-11-65 முடிய உள்ள வரவு செலவுக் கணக்குகளிலிருந்து எடுக்கப்

பட்ட தொகுப்பேடுகள் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கின்றன.

சைவ சித்தாந்த மகா சமாஜக் கட்டட டிரஸ்ட் வரவு செலவுக் கணக்கிலிருந்து எடுக்கப்பட்ட தொகுப்பேடும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

## 28. விண்ணப்பம்

இவ்வாண்டு மேற்குறித்தபடி 16 சமயக் கூட்டங்களும் 1 அந்தர் யோகமும் சென்னையிலும், அதன் சுற்றுப்புறத்திலும் பல்வேறு இடங்களில் நிகழ்ந்தவை குறிப்பிடத்தக்கவை. இக்கூட்டங்களுக்கு வந்திருந்தவர்களின் எண்ணிக்கையும் திருப்திகரமாக யிருந்தது. இப்பணியை இன்னும் சிறந்த வகையில் நடத்துதற்குத் தடையாயிருப்பவை, சமாஜத்திற்கென ஒரு தனிமண்டபம் இல்லாததும், போதிய வருவாய் இல்லாததுமாகும். தற்போது சமாஜ அலுவலகம் வாடகைக் கெடுத்துள்ள சிறு அறைகளில் இருக்கிறது. இங்கு நூல் நிலையம் அமைப்பதற்கோ, கூட்டங்கள் கூடுவதற்கோ இடவசதியில்லை. சமாஜத்திற்கென திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்களால் ரூ. 20,000 செலவில் வாங்கிக்கொடுத்த கட்டடம் மூன்று கடைகளாக அமைந்திருக்கின்றது. அவைகளை மாற்றி மேல்மாடியோடு கட்டவேண்டுமென்று செயற்குழு விரும்புகிறது. சமாஜக்கட்டட டிரஸ்ட் தலைவர் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்களும் இதற்கு இசைவு தந்துள்ளார். திரு. மணலி இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் கட்டட நிதிக்கென ரூ. 6000 வழங்க முன் வந்து ரூ. 4000 சமாஜத்திற்கு வழங்கியுள்ளார்கள். மீதி ரூ. 2000 எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் மேற்சொன்ன கட்டட அமைப்பிற்கு இத்தொகை ஐந்து மடங்காவது பெருகவேண்டும்.

சமாஜத்தின் தொண்டுகள் விரிவடைவதற்கு நிரந்தர உதவியாக யிருக்கக்கூடிய இந்நற்பணியைச் செல்வர்கள் செய்ய முன் வருவார்களாக!

நம் சமாஜ உறுப்பினர் எண்ணிக்கை தற்போது 970 (ஆயுள் உறுப்பினர் 111+பிறர் 859)ஆக உள்ளது. ஒவ்வொரு உறுப்பினருக்கும் சித்தாந்த இதழ் இலவசமாக அனுப்பப்பெறுகிறது. 60 ஆண்டுகள் தொண்டு புரிந்த சைவர்களின் ஒப்பற்ற நிறுவனமாகிய சமாஜத்திற்கு உறுப்பினர் எண்ணிக்கை இவ்வளவு குறைவாகயிருப்பது வருந்தத்தக்கது. சமாஜ அன்பர்கள் ஒவ்வொருவரும் இவ்வெண்ணிக்கையைப் பெருக்க ஆவன செய்ய வேண்டுகிறோம்.

சமாஜம் இப்போது ஆங்கில இதழ்நடத்துப் பெரும் பொறுப்பேற் றிருக்கிறது. சித்தாந்த சாத்திரத்தின் பெருமை தமிழ்நாட்டிற்குப் புறம்பேயுள்ள எல்லா நாடு களுக்கும் தெரியவேண்டும்.

> " திறமான புலமையெனில் வெளிநாட்டார்
> அதை வணக்கஞ் செய்தல் வேண்டும் "

என்ற பாரதியார் சொற்களைச் சித்தாந்த சாத்திர அள விலும் மெய்ப்பிக்கவேண்டும் என்ற உயரிய நோக்கத் தோடும், சைவப்பெருமக்கள் பூரண ஆதரவு கிடைக்கும் என்ற நம்பிக்கையோடும் இவ்வாங்கிலப் பத்திரிகையை ஆரம்பித்திருக்கிறோம். சைவர் ஒவ்வொருவரும் இவ் விதழுக்குச் சந்தா செலுத்துவதோடு மற்றவர்களையும் சந்தாதாரர்களாக்கி சமாஜத்தை ஊக்குவிக்க வேண்டு கிறோம்.

## 29. நன்றி

இம் மகா சமாஜத்தைத் தோற்றுவிக்கக் காரணமா யிருந்த உயர்திரு. மறைமலையடிகளார், ஸ்ரீலஸ்ரீ ஞானி

யார் சுவாமிகள், திரு. ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை ஆகியோருக்கு சமாஜம் வணக்கம் செலுத்தக் கடமைப் பட்டுள்ளது.

'சித்தாந்தம்' பத்திரிகைக்கும் இப்போது வெளியிடயிருக்கும் 'சைவசித்தாந்தம்' என்னும் ஆங்கிலப்பத்திரிகைக்கும், வைரவிழா மலருக்கும், கட்டுரைகள் எழுதியனுப்பிய அன்பர்களுக்கும், மற்றும் பலவிதத்தில்சமாஜப் பணிக்கு உதவி புரிந்துவரும் சைவப் பெரு மக்களுக்கும் சமாஜம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது. சமாஜப் பணி சிறக்க, சைவம் தழைக்க அம்பலவாணர் அருள்புரிவாராக!

செயற்குழுவினர் அனுமதிப்படி

இங்ஙனம்

சென்னை
1—12—'65

கொ. நீ. சிங்காரவேலு
மு. நாராயணசாமி
செயலாளர்கள்

# சைவ சித்தாந்த மகா சமாஜ 60-ஆம் ஆண்டு வரவு செலவுத் தொகுப்பேடு
## (1—12—64 முதல் 30—11—65)

| வரவு | ரூ. | பைசா |
|---|---|---|
| ஆரம்பக் கையிருப்பு | 40 | 78 |
| வங்கி யிருப்பு (S. B. Account) | 762 | 53 |
| தவணை வைப்பு நிதி | 7500 | 00 |
| சந்தா முதலியன | 2243 | 91 |
| ஆயுள் சந்தா | 300 | 00 |
| வங்கி வட்டி | 405 | 23 |
| நன்கொடை | 25 | 00 |
| கட்டட டிரஸ்ட் வரவு | 350 | 00 |
| கட்டட டிரஸ்ட்டில் கடன் வாங்கியது | 400 | 00 |
| அச்சுவகை வரவு | 42 | 50 |
| வைர விழா விளம்பரம் வரவு | 30 | 00 |
| தேர்வுக் கட்டணம் (1964—65) | 60 | 00 |
| 1964ஆம் ஆணடு விழா நன்கொடை | 200 | 00 |
| ஆங்கிலப் பத்திரிகை வரவு | 215 | 00 |
| புத்தகக் கணக்கு வரவு | 355 | 53 |
| | 12930 | 48 |

| செலவு | ரூ. | பைசா |
|---|---|---|
| அச்சு வகை | 1268 | 57 |
| காகிதம் முதலியன | 638 | 95 |
| தவணை வைப்பு நிதி | 8350 | 00 |
| தபால் வகை | 494 | 68 |
| போக்கு வரவு | 136 | 77 |
| 1964ஆம் ஆண்டு விழா | 210 | 96 |
| மாதாந்திரக் கூட்டம் | 102 | 42 |
| அலுவலக மின்சாரக் கட்டணம் | 24 | 00 |
| எழுத்து வகைச சாமான்களும் பிறவும் | 14 | 97 |
| தேர்வுப் பரிசு (1964) | 50 | 00 |
| ஆங்கிலப் பத்திரிகைக் கணக்குக் தற்காலிகமாக மாற்றப்பெற்றது | 241 | 69 |
| ஆங்கிலப் பத்திரிகை வரவு திருப்பித் தந்தது | 215 | 00 |
| புத்தகக் கணக்கின் செலவுகள் | 354 | 96 |
| வங்கி யிருப்பு (S. B. Account) | 814 | 68 |
| சித்தாந்தக் கணக்குக் கையிருப்பு | 12 | 26 |
| புத்தகக் கணக்குக் கையிருப்பு | | 57 |
| | 12930 | 48 |

சமாஜப் பொருள்நிலை : கையிருப்புப் புத்தகங்களின் (விற்பனை) மதிப்பு ரூ. 3622 90

வி. திருநாவுக்கரசு, ஆண்டுக் கணித பரிசோதகர்
எம். சிவராமன், மாதக் கணித பரிசோதகர்
வி. ஆறுமுகம், பொருளாளர்
கோ. நீ. சிங்காரவேலு,
மு. நாராயணசாமி,
செயலர்கள்.

## 'சைவ சிந்தாந்த' ஆங்கில முத்திங்கள் இதழ்

## 1965 நவம்பர் 30-ஆம் நாளோடு முடிவுற்ற ஆண்டின்

## வரவு செலவுக் கணக்கு

| வரவு | ரூ. | பைசா | செலவு | ரூ. | பைசா |
|---|---|---|---|---|---|
| சந்தா தொகை வரவு | 335 | 00 | ஆங்கில இதழ் அச்சடிக்கக் காகிதம் | 204 | 69 |
| சித்தாந்த பொதுக் கணக்கிலிருந்து | | | ஆங்கில இதழ் அச்சடிக்க முன் பணம் | 150 | 00 |
| தற்காலிகக் கைப்பற்று | 241 | 19 | அறிக்கைகள் அச்சிட | 67 | 50 |
| | | | விளம்பரப் பலகை | 12 | 00 |
| | | | பணியாள் சம்பளம் | 22 | 50 |
| | | | தபாற் செலவு | 5 | 55 |
| | | | எழுதுபொருள் | 0 | 50 |
| | | | வங்கியில் இருப்பு | 5 | 00 |
| | | | கையிருப்பு | 108 | 45 |
| | 576 | 19 | | 576 | 19 |

எம். சிவராமன்,
கணித பரிசோதகர்

வி. ஆறுமுகம்,
பொருளாளர்

கோ. நீ. சிங்காரவேலு,
மு. நாராயணசாமி,
செயலர்கள்

## சைவ சித்தாந்த மகா சமாஜக் கட்டட டிரஸ்ட்

## (எண் 2, 3, 4, ஈவினிங் பஜார் கடைகள்) வரவு செலவுத் தொகுப்பு

## 1—12—64 முதல் 30—11—65 வரை

| வரவு | ரூ. | பைசா | செலவு | ரூ. | பைசா |
|---|---|---|---|---|---|
| முன் ரொக்க இருப்பு | 578 | 51 | சமாஜ அலுவலக வாடகை | 300 | 00 |
| ,, பாங்கி ,, | 679 | 35 | தேவார ஆசிரியர் சம்பளம் | 960 | 00 |
| வாடகை வரவு | 2535 | 00 | கார்பரேஷன் வரி | 782 | 25 |
| வட்டி வரவு | 13 | 96 | சமாஜத்திற்கு நன்கொடை | 350 | 00 |
| | | | வைர விழா மலருக்காகக் கடன் | 400 | 00 |
| | | | பெரியபுராண விரிவுரைச் செலவு | 71 | 19 |
| | | | கட்டடம் பழுது பார்க்க செலவு | 71 | 10 |
| | | | ரொக்க இருப்பு | 651 | 22 |
| | | | பாங்கி இருப்பு | 221 | 06 |
| | 3806 | 82 | | 3806 | 82 |

சென்னை
20—12—64

அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ.,
கட்டட டிரஸ்ட் தலைவர்

முருகன் அச்சகம், சென்னை-14

பணியாளர் குழு :- 1. திரு ஸி. எம். இராமச்சந்திரம் செட்டியார், கோவை. 2. திரு க. வச்சிரவேல் முதலியார், காஞ்சி. 3. திரு வைரவப் பிள்ளை, கொழும்பு-6. 4. திரு பு. ரா. சுவாமிநாதன், எம். ஏ., எல். டி., சிதம்பரம். 5. திரு மஞ்சக்கொல்லை சம்பந்தமூர்த்தி முதலியார். 6. திரு எஸ். நடராஜ நாடார், பி. ஏ., பி. எல்., 7. திரு வித்துவான் வெள்ளைவாரணனார், சிதம்பரம். 8. திரு கு. காமாட்சி அம்மாள், எம். ஏ., சேலம். 9. திரு ஏஆர். ஏஆர். எம். சொக்கலிங்கம் செட்டியார், கரைக்குடி. 10. திரு எஸ். நாராயணன் செட்டியார், காரைக்குடி.

பத்திராசிரிய ஆலோசனைக் குழு:- 1. திரு க. வச்சிரவேல் முதலியார். 2. திரு எஸ். அம்பிகைபாகன், யாழ்ப்பாணம். 3. திரு க. வெள்ளைவாரணனார். 4, திரு ஆ. சுப்பிரமணியம் (சூபரிண்டெண்டண்ட் இன்ஜனியர்) 5. திரு ந. ரா. முருகவேள்.

ஆராய்ச்சிக் கழகம் :- 1. மேலையூர் மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள். 2. வித்துவான் ந. சிவப்பிரகாச தேசிகர், சிதம்பரம். 3. வித்துவான் சொ. சிங்காரவேலனார், 4. வித்துவான் அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்., 5. வித்துவான் அருணைவடிவேலு முதலியார். 6. திரு பி. சுந்தரேசம் பிள்ளை அவர்கள், கும்பகோணம்.

வெளியூர் ஆலோசனைச் சபையினர் :-

செங்கற்பட்டு:- திரு வித்துவான் திருஞான சம்பந்த முதலியார், காஞ்சி. திரு கே. இராஜு முதலியார், கைவண்டூர். திரு வா. தி. மாசிலாமணி முதலியார்.

தென்னார்க்காடு:- திரு என்.எம். பொன்னம்பலம் பிள்ளை, திரு எஸ். இரத்தினசாமி செட்டியார், திரு பழமலை, பெண்ணாகடம்.

புதுவை :- திரு சேனாபதி முதலியார். திரு ஆர். பழமலை, திரு சென்னியப்ப முதலியார்.

காரைக்கால் :- திரு சொ. தட்சிணாமூர்த்தி முதலியார். திரு கே. எஸ். எஸ். நடேச முதலியார்.

தஞ்சாவூர் :- திரு விருத்தாசல செட்டியார், திரு வைத்தியலிங்க முதலியார். திரு. திருநாவுக்கரசு முதலியார்.

திருச்சிராப்பள்ளி :- திரு அரிமழம் ரா. அண. அண்ணாமலைச் செட்டியார். திரு ஜி. வரதராஜப் பிள்ளை, திரு. எல். செல்லப்பச் செட்டியார்.

இராமநாதபுரம் :- திரு சேவு. மெய்யப்பச் செட்டியார். திரு சிடி. எம். என். நாராயணன் செட்டியார். திரு காசிநாததுரை.

மதுரை :- திருமதி இராதா தியாகராசன், திருமதி புஷ்பம் நடராஜன், திரு வித்துவான் ஔவை. சு. துரை சாமிப் பிள்ளை.

திருநெல்வேலி: திரு வி. எஸ். ஆறுமுகம் பிள்ளை, அம் பாசமுத்திரம், திரு வித்வான் மறை திருநாவுக்கரசு. திரு எஸ். எஸ். அருணசலம் பிள்ளை.

வடஆர்ககாடு :- திரு புரிசை முருகேச முதலியார். திரு வி. எஸ். கணபதி முதலியார், தெள்ளாறு.

கன்யாகுமரி :- திரு சி. வள்ளிநாயகம் பிள்ளை, பி.ஏ., -பி. எல், திரு வித்துவான் குமரேச பிள்ளை. திரு டாக்டர், பி. நடராஜன்.

சேலம் :- திருமதி அ. கு. காமாட்சி அம்மையார். திரு அப்பாய் செட்டியார்.

தர்மபுரி :- திரு பொத்தனூர் (வேலூர்) மணிவாசகம். திரு எம். ஆர். குணசீலன்.

கோவை :- திரு சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார். பி.ஏ., பி. எல்., திரு கே. பி. ஆர். சுப்பராயன், சிவகிரி, திரு ரா. ஆறுமுகம், புஞ்சைப் புளியம்பட்டி.

பெங்களூர் :- திரு ஏ. ஆர். அண்ணுமலை முதலியார். திரு எஸ். கனகசபாபதி பிள்ளை. திரு பத்மநாப முதலியார்.

கொழும்பு :- திரு குலசபாநாதன். திரு அருள் தியாக ராஜா. திரு சபாபதிப் பிள்ளை.

திருக்கோணமலை :- திரு பண்டித ஆர். வடிவேலு. திரு எஸ். அம்பலவாணன்.

மட்டக்களப்பு :- திரு க. அருணசல தேசிகர். திரு பூபால பிள்ளை. திரு கணபதி.

---

மலாய் நாடு :- திரு பி. எல். சிவநேயன். திரு அ. மு. பெரியசாமி பிள்ளை. திரு ஆர்வி. கந்தையா. திரு எம். இராமசாமி முதலியார்

கல்கத்தா :- திரு என். என். தியாகராஜன், தமிழ் இலக்கியக் கழகம். திரு என். சிங்காரம், பிலிப்ஸ் இந்தியா லிமிடெட், 31 பி. ராஜா பாசந்தராய் ரோட், கல்கத்தா-29.

பம்பாய் : திரு ஆர். முருகையா, 6/67 சரஸ்வதி காலனி, மாதுங்கா, பம்பாய்-19.

டில்லி :- திரு எம். எஸ். பி. ஷண்முகம், எம். ஏ., டில்லி தமிழ்ச் சங்கம்.

---

**Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.**